# சாவியத் நாட்டுக் கவிதைகள்





தமிழாக்கம்
ரகுநாதன்



ஸ்டார் பிரசுரம்
சென்னை-5.

# அட்டவணை

முன்னுரை

**1. அஞ்சலி**

1. லெனின் பிறந்தார்! ... எஸ். ஷிபச்சோவ்
2. எந்நாளும் வாழும் லெனின்! ... விளதிமிர் பவ்லினேவ்
3. லெனின் ... அலெக்சி சுர்கோவ்

**2. நாடும், மக்களும்**

4. அருமை! மிக அருமை! ... விளதிமிர் மயாகோவ்ஸ்கி
5. குஸ்நெத்ஸ்க்கில் நடந்தகுட்டிக்கதை... ,,
6. ஒரு கம்யூனிஸ்டின் வாழ்க்கை ... மிர்ஸோ துர்சுன் ஸாதே; போக்கி ராக்கிம் ஸாதே
7. வாஸ்யா மாமா ... யெவ்ஜெனி யெவ்துஷெங்கோ
8. ஓக்காட்ஸ்கிலுள்ள ஆர்க்டிக் கடற்கரையில் ... ரிம்மா காஜகோவா

**3. பல்சுவை**

9. வானம் ... நிக்கோலாய் அசயேவ்
10. ரோமியோ - ஜூலியத் ... ,,
11. கோடையின் முடிவு ... ,,
12. கம்பங் கதிர்கள் ... அலெக்ஸாந்தர் த்வர்தோவ்ஸ்கி
13. உறுதிபட்ட கருத்தொன்று... ... ,,
14. என்னை நாளும் பிடிக்காதே! ... பெர்தி கெர்பாபயேவ்
15. மாஸ்கோ இரவுகள் ... எம். மாட்டுச்சோவ்ஸ்கி
16. இயக்கும் சக்தி ... கிளப் பாகிரெவ்
17. என்னரும் உலகமே! ... பெட்ரூஸ் புரோவ்கா
18. அன்னையின் பிரிவு ... காய்சின் குலியேவ்
19. காதலைப் பற்றி ... ஐ. செல்வின்ஸ்கி
20. ஆசியத்தின் பேரோசை ... மிர்ஸோ துர்சுன் ஸாதே
21. கவிஞனுக்கு ... ,,
22. எனக்கோ பழம் நாட்கள் எல்லாம்... யாரோசோவ் ஸ்மெல்யாகோவ்
23. முதியவர்கள் ... ஓலெக் த்மித்ரியேவ்
24. ஊகியுங்கள்! ... ஓல்ஜாஸ் சுலெய்மெனேவ்
25. ஓடும் ரயிலில் உல்லாச கீதம் ... ஆந்திரே வோஜ்நெஸன்ஸ்கி
26. பழைய எழுத்துப்பிரதி ... ராசுல் ராஜா
27. என் நாடு ... அலிதெத் நெம்துஸ்கின்
28. எழிலரசி ... யெவ்ஜெனி யெவ்துஷெங்கோ

**4. வசந்த காலம்**

29. வசந்தம் வருகிறது ! ... கார்லோ கலாத்ஸே
30. வசந்தத்தின் காலை ... போரிஸ் குலிகோவ்
31. வசந்த காலக் காலைப்பொழுது ... பெட்ருஸ் புரோவ்கா
32. வசந்த காலப் புயல் ... எப். தியூத்சேவ்
33. படிகத் தெளிவொளிரும் பகற் பொழுது ... ,,
34. வசந்தத்தில் ஒருநாள் ... ராமிஸ் ரைஸ்குலோவ்

**5. வான்வெளிப் பயணம்**

35. வான்வெளி வீரர் வரும் வழியில் ... யெவ்ஜெனி யெவ்துஷெங்கோ
36. அண்ட வெளிப்பயண அற்புதம் ... ஓஸிப் கோலிச்சேவ்
37. எனது சந்ததியாருக்கு ... ,,
38. உடுக்களை வென்ற சோவியத் மானிடன் ... ஓல்கா பெர்கோல்ஜ்
39. வாஸ்டாக்கின் வான் வெளிப் பயணம் ... மைக்கேல் லெவோவ்
40. ஏகமனதான தீர்மானம் ... மைக்கேல் விளாடிமோவ்

**6. குழந்தை உலகம்**

41. பள்ளிக்கு நல்வரவு ... விளதிமிர் லிஃப்சிட்ஜ்
42. கதைப் புத்தக தினம் ... சாமுவேல் மார்ஷாக்
43. கான்யா – ஓர் அழுமுஞ்சி ... எச். பார்ட்டோ

**7. இந்திய நட்புறவு**

44. இல்லை ! இல்லை ! இதுவேறு! ... விக்தர் கொஞ்சராவ்
45. இந்தியக் கவிஞர்களுக்கு ... இராக்லி அபாஷித்ஜே
46. நீலப்பறவை ... ,,
47. காலைப் பொழுதில் டில்லி ... அனதோலி சோவ்ரோனேவ்
48. இந்திய விருந்துபசாரத்தின் மலர்கள் ... காரா ஸீத்லேவ்
49. பிணைந்த கைகள் ... ,,
50. இந்திய மகள் ... ,,
51. தாகூர் இல்லத்துக்கு விஜயம் ... ,,
52. கல்கத்தா ... ,,
53. குழந்தைகள் கம்யூனில் தாகூர் ... அலெக்ஸாந்தர் பிலதோவ்

அனுபந்தம்

**8. சோவியத் நட்புறவு (இந்தியக் கவிஞர்கள்)**

54. லெனின் சமாதி முன்னால் ... வள்ளத்தோல்
55. சோவியத் விஞ்ஞானிகளுக்கு ... சௌத்ரி
56. மாவீரர் தம் நிலமே! ... பிரேம்தவன்
57. ஜெயபேரி கொட்டிடுவோம் ... ரகுநாதன்
85. அக்டோபர் புரட்சிக்கு வாழ்த்து ... ,,

# முன்னுரை

அண்டை நாடுகளெல்லாம் அருமை நண்பர்களாக அமைந்து விடுவதில்லை என்ற கசப்பான அனுபவத்தைச் சமீப கால நிகழ்ச்சிகள் நமக்கு வழங்கியுள்ளன. சோவியத் யூனியனும் நமக்கு அருகிலுள்ள ஓர் அண்டை நாடுதான். ஆனால், சோவியத் யூனியனே இன்று உலக அரங்கில் பாரதத்துக்கு மிகவும் உற்ற நண்பனாக விளங்கி வருகிறது; நமது நாட்டின் நிர்மாணத்திட்டங் களுக்குப் பலவகையிலும் கைகொடுத்து உதவி வருகிறது; இதற் கெல்லாம் மேலாக, பாரதத்துக்குச் சோதனை ஏற்பட்ட காலத்தி லெல்லாம் உலக அரங்கில் நம் பக்கம் நின்று, நமக்கு ஆதர வளித்து வந்திருக்கிறது; இதன்மூலம் நம் நாட்டின்மீது தான் கொண்டுள்ள நட்புரிமையையும் நல்லெண்ணத்தையும் நிலை நாட்டி வந்திருக்கிறது. எனவே பாரதத்துக்கும் சோவியத் யூனி யனுக்குமிடையேயுள்ள நட்பும் நல்லுறவும் நாளும் வளர்ந்தோங்கி வருகின்றன. இந்த இருபெரும் நாடுகளுக்கிடையே இமய நெடுஞ்சுவர் இடைமறித்து நின்றாலும், இருநாட்டினரின் இதயங் களும் கூடிக் குலாவுவதற்கு, எந்தவொரு நெடுஞ்சுவரும் தடை மதிலாக நிற்கவில்லை. மேலும், பாரதம் இன்று சமதர்ம லட்சியத் தைத் தனது சமுதாய மார்க்கமாக ஏற்றுக் கொண்டுள்ளது; சோவியத் யூனியனே சமதர்ம லட்சியத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்ததில் உலகிற்கே மூத்த பிள்ளையாக விளங்குகிறது. எனவே அந்நாட்டின் அனுபவங்கள் நமக்கு நல்லபல படிப்பினை களை வழங்க முடியும். இதனால் நாமும் அந்நாட்டின் வாழ்வையும் வளர்ச்சியையும் தெரிந்து கொள்வதில் அக்கறை காட்டுகிறோம். எனினும் இவற்றைத் தெரிவிக்கும் வரலாற்று நூல்களின்மூலம் நாம் அந்நாட்டின் புற வளர்ச்சியைத்தான் பெரிதும் தெரிந்துகொள்ள முடியும். அந்நாட்டின் அகவளர்ச்சியை, இதயப் பண்பைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், அவற்றை நாம் உணர வேண்டுமென்றால், அந்நாட்டின் இலக்கியங்கள்தான் நமக்கு உதவமுடியும். அதிலும் குறிப்பாக அந்நாட்டின் கவிதைகள்தான் அந்த மக்களின் இதயத்தையும் பண்பாட்டையும் நமக்கு இனம் காட்ட முடியும். அவ்வாறு இனம் காண்பதற்குதவும் எளிய முயற்சியாகத்தான் இந்தக் கவிதைத் தொகுதி உருப்பெற் றுள்ளது.

இந்தத் தொகுதியில் 38 கவிஞர்களின் 53 கவிதைகள் இடம் பெற்றுள்ளன. இந்தக் கவிஞர்களில் ஓரிருவரைத் தவிர ஏனை யோர் அனைவரும் சோவியத் ஆட்சி மலர்ந்த பின்னரும் வாழ்ந்த வர்கள்; வாழ்பவர்கள். இன்றைய சோவியத் கவிஞர் பரம்பரை யின் மூத்த பிள்ளையாக விளங்கும், எழுபது வயதைத் தாண்டி

விட்ட நிக்கோலாய் அசயேவ் முதற் கொண்டு, இருபது வயதை எட்டிப் பிடித்துள்ள இன்றைய இளந்தலைமுறையின் புதிய கவிஞர்களான ஒலெக் த்மித்ரியேவ், ஓல்ஜாஸ் சுலெய்மெனேவ், ராமிஸ் ரைஸ்குலோவ் முதலிய கவிஞர்கள் வரையிலும் பல கவிஞர்கள் இந்தத் தொகுதியில் இடம் பெறுகின்றனர். இந்தக் கவிஞர்கள் வரிசையில் இன்றைக்கு 35 ஆண்டுகளுக்கு முன்னர் இளவயதில் மாண்டுபட்ட, சோவியத் நாட்டின் புதிய கவிஞர் பரம்பரைக்கு முன்னோடியாக விளங்கிய புரட்சிக்கவிஞர் விளதிமிர் மயாகோவ்ஸ்கியும், இன்று சொந்த நாட்டிலும் வெளிநாட்டிலும் பிரபலமாகியுள்ள அலெக்ஸாந்தர் த்வர்தோவ்ஸ்கி, மிர்ஸோ துர்சுன் ஸாதே, யெவ்ஜெனி யெவ்துஷெங்கோ முதலிய சிறந்த கவிஞர்களும் அணி செய்கின்றனர். மேலும் சோவியத் யூனியன் பல்வேறு மொழிகள் பேசும் தேசிய இனங்களைத் தன்னுட் கொண்ட நாடு என்பதையும், அங்கு புரட்சிக்கு முன்னல் வரிவடிவம்கூட ஏற்படாத வழக்கு மொழிகளாக இருந்தவைகூட, சோவியத் வாழ்க்கை வந்த பின்பு, வளர்ச்சியும் மலர்ச்சியும் பெற்று, இலக்கியங்களைத் தோற்றுவித்து வருகின்றன என்பதையும் நாமறிவோம். அத்தகைய பல்வேறு தேசிய இனக் கவிஞர்களையும் இத் தொகுதியில் காணலாம். அஜர்பெய்ஸான், துருக்மேனியா, ஜார்ஜியா, கஜாக்ஸ்தான், கிர்கிஸ்தான், தாஜிக்ஸ்தான் முதலிய பிரதேசத்துக் கவிஞர்களையும், மற்றும் சிறுபான்மைத் தேசிய இனமான எவங்க் மொழிக் கவிஞர் ஒருவரையும், பிற ருஷ்யக் கவிஞர்களையும் இந்தத் தொகுதியில் நாம் அறிமுகம் செய்து கொள்கிறோம். எனவே இந்தத் தொகுதி சோவியத் யூனியனின் எண்ணத்தையும் இதயத்தையும் முழுமையாகப் புரிந்துகொள்ளத் துணைபுரியும் என்று நம்புகிறேன்.

இந்தத் தொகுதியில் அடங்கியுள்ள பலவகைப்பட்ட கவிதைகளையும் நான் ஏழு பகுதிகளாகப் பிரித்துள்ளேன். முதற்பகுதியில் இன்றைய சோவியத் குடியரசின் முதற்பெரும் நிர்மாண கர்த்தாவான லெனினுக்கு, சோவியத் கவிஞர்கள் செலுத்திய கீதாஞ்சலிப் பாடல்கள் சில இடம் பெறுகின்றன. அடுத்த பகுதியில் சோவியத் நாட்டு மக்களின் வாழ்க்கை, தியாகம், ஊக்கம், உற்சாகம் ஆகியவற்றைக் காட்டும் சில பாடல்கள் இடம் பெறுகின்றன. மூன்றுவது பகுதியில் சோவியத் கவிஞர்களின் எண்ணத்தையும், இதயத்தையும், லட்சியத்தையும், புதிய கருத்துக்களையும், கற்பனைகளையும் புலப்படுத்தும் பல்சுவையான கவிதைகளைக் காணலாம். ஆண்டிற் பெரும்பகுதி கடுங்குளிரின் மத்தியில் வாழும் ருஷ்ய மக்களுக்கு, கதிரவனின் வரவும், வசந்தமும் வரப்பிரசாதமாகும். நமது நாட்டில் நிலவையும் தென்றலையும் பற்றிப் பாடாத புலவர்கள் இல்லை என்பதைப் போலவே, ருஷ்ய நாட்டில் வசந்த பருவத்தைப் பற்றிப் பாடாத

புலவர்கள் இல்லை எனலாம். எனவே நான்காம் பகுதியில் அத்தகைய வசந்த பருவம் பற்றிய பாடல்கள் சில இடம் பெறுகின்றன. சோவியத் நாடு வான்வெளிப் பயணத்தில் அடுத்தடுத்துப் பெற்றுவரும் வெற்றிகள் இன்று அகில உலகத்தின் கவனத்தையும் கவர்ந்துள்ளன என்பதை நாமறிவோம். மானுடத்தின் வெற்றியான இந்தச் சாதனைகளை வாழ்த்தி வரவேற்று, சோவியத் கவிஞர்கள் சிலர் பாடியுள்ள கவிதைகள் ஐந்தாம் பகுதியில் அடங்கியுள்ளன. வளர்ந்துவரும் குருத்துக்களான குழந்தைகளின் வளர்ச்சியில் ருஷ்ய நாட்டினர் மிகுந்த அக்கறை காட்டுகின்றனர் என்பதும், குழந்தைகளுக்காக அவர்கள் ஏராளமான வண்ணப் புத்தகங்களை வெளியிட்டு வருகிறார்கள் என்பதும் நாமறிந்ததே. அந் நாட்டில் குழந்தைகளுக்கென்றே பாடல்கள் எழுதும் குழந்தைக் கவிஞர்கள் பலர் உண்டு. அத்தகையோரின் சில கவிதைகள் அடுத்த பகுதியில் இடம் பெற்றுள்ளன. ஏழாவது பகுதியில் சோவியத் மக்கள் இந்தியாவின் மீது கொண்டுள்ள நட்புறவையும் நல்லெண்ணத்தையும் புலப்படுத்தும் பத்துக் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இவற்றை இயற்றியவர்களில் இராக்லி அபாஷித்ஜே, விக்தர் கொஞ்சராவ், காரா ஸீத்லேவ் முதலியோர் இந்திய நாட்டுக்கு விஜயம் செய்து, நமது நாட்டையும், நாட்டு மக்களையும் நேரில் கண்டு சென்றவர்கள். இவர்களது இந்திய விஜயம் இந்தியாவைப் பற்றிப் பல பாடல்களை எழுத இவர்களைத் தூண்டியுள்ளது. இந்தப் பகுதியில் இடம்பெறும் கவிதைகள் இந்தியர்களான நமக்குக் களிப்பும் பெருமிதமும் ஊட்டுவனவாகும். இறுதியில் இந்தியக் கவிஞர்கள் சிலரது பாடல்கள் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளன. சோவியத் கவிஞர்கள் நம்பால் காட்டும் நட்புரிமையைப் பற்றிய பாடல்களோடு, நம் நாட்டுக் கவிஞர்கள் அவர்கள்பால் காட்டும் நட்புரிமையைப் புலப்படுத்தும் சில பாடல்களை இங்கு நினைவு படுத்துவது சாலப் பொருத்தமே. அதற்கேற்ப அமைந்த அனுபந்தத்தில் மலையாளக் கவிஞர் வள்ளத்தோல், இந்திக் கவிஞர் பிரேம்தவன், வங்கக் கவிஞர் சௌத்ரி ஆகியோர் கவிதைகளின் தமிழாக்கங்களோடு, தமிழ்க் கவிஞனை எனது கவிதைகள் இரண்டும் இடம் பெற்றுள்ளன.

மொழிபெயர்ப்பு என்பது ஒருகலை. அந்தக் கலையில் வசனத்தை மொழிபெயர்ப்பது ஓரளவுக்கு எளிதானது; கவிதையை மொழிபெயர்ப்பதோ மிகவும் சிரமம். கவிதையை மொழிபெயர்ப்பதற்கு ஒருவன் கவிஞனாகவும் இருக்க வேண்டும் என்பதோடு, மொழிபெயர்க்கும் கவிதையின் கருத்தும் உணர்வும் உருக்குலையாத வண்ணம், மொழிபெயர்ப்புக்கு வடிவும் வலுவும் கொடுக்கும் பொறுப்பும், திறமையும் அவனுக்கிருந்தாக வேண்டும். மேலும் எதுகையும் மோனையும் தாளக்கட்டும் சமயங்களில் மூலக் கவிதையை நீட்டவோ, குறுக்கவோ தூண்டும் நிர்ப்பந்தங்களை

ஏற்படுத்தும். இவற்றுக்குத் தலை வணங்காது, எடுத்துக்கொண்ட கவி வடிவத்துக்குள்ளேயே மூலக் கவிதையின் கருத்தையும் உணர்ச்சியையும் இழுத்து மடக்கிக் கொண்டுவந்து நிலை நிறுத்துவதே மொழிபெயர்ப்பவனின் கடமையாகும். இந்தக் கவிதைகளைத் தமிழாக்கியபோது, நான் இந்தக் கடமையை மறக்காது, கவிதைகளின் கருத்தும் உணர்வும் சிதையவோ சிதறவோ செய்யாதவாறு அவற்றுக்குத் தமிழ் வடிவம் அளிப்பதிலேயே பெரிதும் கவனம் செலுத்தியுள்ளேன். இம்முயற்சியில் ஏற்படும் இடர்ப்பாடுகளைத் தவிர்க்கும் விதத்தில் அதற்கேற்ப எளிய நடையையும், வடிவத்தையும், சந்தத்தையும், பயன்படுத்தியுள்ளேன். இத் தொகுதியிலுள்ள கவிதைகளில் மயாகோவ்ஸ்கியின் கவிதைகள் தனித்தன்மை வாய்ந்தவை. கனல் தெறிக்கும் வார்த்தைப் பிரயோகமும், கம்பீரமான நடையும் அவருக்குக் கை வந்தவை; மேலும், அவர் தம் கவிதையைச் சொல்லும் முறையிலும் தனியொரு பாணியைக் கையாண்டவர். சொல்லப்போனால், ரசிகனை முன்னிறுத்திக் கொண்டு, அவனிடம் நேர்முகமாகச் சொல்லும் பாணியிலேயே அவரது பல கவிதைகள் உருவாகியுள்ளன, இதனால் அவரது கவிதைக்கு இதயத்திலே வந்து தைக்கும் அசுரத்தனமான வலிமையுண்டு. இதனால்தான் அவர் உயிர் வாழ்ந்த காலத்தில் அவர் தமது கவிதைகளைத் தாமே ரசிகப் பெருமக்களுக்குச் சொல்லிக் காட்டுவார். இவ்வாறு அவர் சொல்வதைக் கேட்க, ரசிகர்களும் பெருவெள்ளமாகத் திரண்டு வருவது வழக்கம். அவரது 'கவிதை சொல்லும்' பாணி அப்படி; கவிதை வடிவமே அதுதான். எனவே அவரது கவிதைகளை மொழிபெயர்க்கும்போது நான் அவரது இந்தப் பாணியையும் வடிவத்தையும் வலுக்குன்றாமல் தமிழில் கொண்டுவர முயன்று, அதில் ஓரளவுக்கு வெற்றியும் கண்டுள்ளேன்.

சென்ற பத்தாண்டுக் காலத்தில், பல்வேறு சமயங்களில், சந்தர்ப்பம் கிட்டியபோதெல்லாம் நான் சோவியத் நாட்டுக் கவிதைகளைத் தமிழாக்கி வந்துள்ளேன். அவ்வாறு தமிழாக்கிய கவிதைகளில் ஏறத்தாழச் செம்பாதிப் பகுதியை மட்டும் தேர்ந்தெடுத்து இந்தத் தொகுதியை நான் உருவாக்கியுள்ளேன். மொத்தத்தில் இந்தத் தொகுதியில் அறிமுகமாகும் கவிதைகள் சோவியத் கவிஞர்களின் இதயத்தைத் தொட்டுணர்ந்து இனம் காணும் முயற்சியில் வாசகர்களுக்குக் கணிசமான அளவில் துணை நிற்கும் எனக் கருதுகிறேன். இந்தக் கவிதைகள் பலவும் 'சோவியத் நாடு' இதழில் வெளிவந்த காலத்தில் இவற்றுக்கு நல்ல வரவேற்பும் பாராட்டும் கிட்டி வந்தன. அந்த வரவேற்பு இந்தத் தொகுதிக்கும் கிட்டும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

திருநெல்வேலி
1—5—'65

ரகுநாதன்

# 1. லெனின் பிறந்தார் !

எஸ். ஷிபச்சோவ்

**செ**ங்குத்தாய், மஞ்சள் நிறம் செறிந்த பெருங்கரையாய்த்
தெரிகின்ற வால்காவில் அன்றைத் தினத்தினிலே
பொங்கியது பெருவெள்ளம் ; பூரிப்பும் புத்தொளியும்
பொலிகின்ற பொற்றையின்மேல் போற்றநிற்கும்
சிம்பர்ஸ்க்கு
அங்கணைந்து விம்மிவரும் ஆற்றுப் பெருக்கத்தில்
அலைபாய்ந்து மிதந்திடுமோர் அணிநகராய்த்
தோற்றியதே.

வெண்ணிறத்துப் பனிப்படிவம் மிதக்குமொரு நீரோட்ட
விரிவிருந்தும், பெருவெள்ளம் விண்நிவர்ந்த
தெனத்தோற்றும்
கண்ணெட்டும் அடிவானக் காட்சியிலே, ஒளிவீசிக்
காணுமொரு குன்றிருந்தும், கால்பரப்பி வீசிவந்த
தண்ணென்ற இளங்காற்று ஆப்பிள் தருக்களுக்கும்
தங்கு குடி மனைகளுக்கும் மேலாகத் தாவியதே.

வலிமையினை உரிமைகளை வலியுறுத்த வந்ததெனும்
வசந்தப் பருவமதில் வழிந்தோடும் பெருவெள்ளப்
பொலிவாங்கே கண்களுக்குப் புலனான அந்நேரம்
புதுவெள்ளப் பெருக்காலே நதிமட்டும் பொங்காமல்
கொலுவிருந்த உருசியமே குதூகலத்தால் அந்நாளில்
கும்மென்று விம்முகின்ற கோலமெனத்
தோன்றியதே.

தேங்கிநிற்கும் நீர்ப்பரப்பில் சிதறுண் டிருந்த பல
சிற்றூர்கள் ஆங்காங்கே தென்படவும், வசந்தத்தின்
பூங்குலத்து முகைக்கூட்டம் வனந்தனிலே பொலிவுறவும்,
பூரிப்பும் புதுப்பொலிவும் பொங்குகின்ற ஏப்பிரலில்
ஆங்கொருநாள் வால்காவின் கரையமைந்த அந்நகரில்
அருமைத் தலைவர் லெனின் அவருலகில் பிறந்தாரே.

---

**சிம்பர்ஸ்க் : லெனின் பிறந்த ஊர்.**

# 2. எந்நாளும் வாழும் லெனின்

விளதிமிர் பவ்லினேவ்

நேரியதோர் நெஞ்சிலவர் பேரிதயம் துடிக்கும்!
நெஞ்சுரத்திற் சிறந்தாரை அவருணர்வு தூண்டும்!
பாரில்மனத் திண்மையொடும் உண்மையொடும் செல்லும்
பாதைதனை அவர்கரமே நாமறியக் காட்டும்!
பாவலர்தம் படைப்பினிலே நவநவமாம் ஆற்றல்,
பார்த்தறியாப் புதுமையென மானிடர்செய் பரவை,
ஏவுகணை வான்வெளியில் தாவுகின்ற விந்தை—
இவையனைத்தும் லெனின்விஜயம் ஈட்டியநல்
வெற்றி!

கன்னிநில மண்ணிலவர் நம்முடன்கால் வைத்தார்;
களத்தினிலும் உழைப்பினிலும் கரங்கோத்து
வந்தார்;
முன்னடத்தும் தலைவரென, தந்தையென, நட்பின்
முற்றுமுயிர்த் தோழரென ஒவ்வொருவ ரோடும்
மார்க்க பந்தாய், நற்றுணையாய், சற்குருவாய் வந்தார்;
மாளாத உயிராற்றல் மலிந்தபெரு மேதை
தீர்க்கமுடன் நம்மவர்தம் சிந்தையிலும், நெஞ்சத்
தெளிவினிலும் உணர்வினிலும் அணுஅணுவாய்
வாழ்ந்தார்!

நாமெல்லாம் மறைந்திடுவோம்! என்றாலும், நாளும்
நறுமலரும் குழந்தைகளும் நவநவமாய்த் தோன்றும்
பூமியிது! ஆதலினால், அவர்என்றும் பொன்றாப்
புதுமையொடு நிரந்தரமாய்ப் பல்லூழி வாழ்வார்!
ஆயிரம்பல் லாயிரமாம் முறை யவரை மாற்றார்
அழித்தாலும் அவரென்றும் உயிர்த்தெழுந்து நிற்பார்!
மாய்வறியார்! எந்நாளும் மறைவறியார்! இந்த
மகத்துவமே லெனினென்னும் மாமேதை யாவார்!

# 3. லெனின்

அலெக்சி சுர்கோவ்

பனிவெள்ளை முடிதரித்துப் பளபளத்துத் தோன்றும்
பைன்மரமும் பிர்மரமும் நிறைசாலை யதனில்,
தனிநீல நிழல்காட்டிப் பனிமூடித் தோற்றும்
தட்டொட்டிக் கட்டிடங்கள் சூழ்வீதி தன்னில்,
பெருநகர மாந்தரது பேச்சொலிகள் நாளும்
பிரவகித்துக் கலகலக்கும் பிரதேச மதனில்,
தெரிவான தந்தலைவர் தமக்கவர்தம் மக்கள்
திருக்கோயில் தனையாங்கே உருவாக்கி வைத்தார்!

காலத்தின் படுநாசக் கரம்மோதி னலும்
கலங்காத கற்கொண்ட செங்கோட்டை யாக,
ஞாலத்தில் தன்னகத்தே அமைதியினை நாளும்
நாட்டுமொரு திருக்கோயிற் கோட்டமது வாக,
தன்னருமைத் தாயகத்தின் இதயமெனத் தகுமோர்
தலத்தாங்கு மரணமிலாத் தலைவரெங்கள்
லெனின்தன்
பொன்னுன பூதவுடல் தனைப்பாது காத்துப்
புகழ்க்கோயில் தனில்வாழப் புரிந்திட்டோம் நாங்கள்!

இரவுவர மாஸ்கோவின் ட்ராம்வண்டி யோசை
எல்லாமும் நின்றுங்கே பேரமைதி சூழும்;
வரும்நட்ட நிசிப்பொழுதின் வரவுதனைக் கூறி
மணியோசை கிரெம்லினிலே மதுரமெனக் கேட்கும்;
தலைவரவர் திருமுகத்தைத் தரிசிப்ப தொப்பத்
தண்ணிலவுக் கதிர்மெல்லத் தானிறங்கித் தேங்கும்;
அலைபரவும் காற்றசைவில் அமுதவிசை பாடி
அணிசெய்யும் செங்கொடியும் நிமிர்ந்தாங்கே நிற்கும்!

பனிமூடும் ஆர்க்டிக்கில் பணிகள் புரிந் தாலும்,
பாமீரின் பனிக்காட்டில், தென்பக்கக் கடலில்
தனியான ஆராய்ச்சி புரிந்தாலும், சப்தம்
தனை மிஞ்சும் வேகத்தில் விண்ணிலே தாவும்
ஏவுகணை விட்டாலும், எதிரியரைத் தாக்கல்,
இன்பமுறல், தொழிலியற்றல், இரங்கல்என வாழ்வில்
யாவைபுரிந் தாலும்எங்க ளெண்ணமெல்லாம்
லெனின்தன்
எண்ணத்தோ டெந்நாளும் இணைந்தே இருக்கும்!

நற்குணமும் நல்லறமும் நலன்பலவும் லெனினின்
நாமத்தின் உள்ளடக்கம்; மானிடத்தின் வாழ்க்கை,
கற்பினொடு காதல், புகழ் எல்லாமும், மற்றும்
கடல், நதிகள், விளைநிலங்கள், கதிர்விடுக்கும் ஏரி
என்பனவும் அவர்பெயரில் இணைந்தபெரும் உண்மை
எம்மருமைத் தாயகமாம் உருசியத்தில் எங்கள்
அன்பரவர் லெனின்பிறந்த காரணத்தால் சொல்லற்
கரியபல நன்மையெமை வந்தடையக் கண்டோம்!



# 4. அருமை! மிக அருமை!

விளதிமிர் மயாகோவ்ஸ்கி

பாருலகை, பாருலகின் பலப்பலவாம் அருமைகளை
நேருறவே கண்ணுற நெஞ்சாரப் பார்த்திட்டேன்.
பாருலகின் வாழ்க்கை இது பரம சுகம் ; வாழ்வதுவோ
ஆரமுதம் போல் அருமை! அருமையிலும் தனி அருமை!
ஆயினும் நம்—
பரபரக்கும் இவ் வாழ்வில் பல சமர்கள், மோதுதல்கள்
சிரமங்கள், கரகரப்பு, சிக்கலெல்லாம் மிகவுண்டு.
இருக்கட்டும். அவையெல்லாம் இருந்துவிட்டுப்
போகட்டும்!
பார் அங்கே!
நெளிந்தோடும் பாம்பெனவே நீண்டோடும் தெரு வீதி ;
வழியெல்லாம் அணிவகுத்த வரிசையென என் முன்னே
எழுந்தோங்கி நிற்கின்ற இல்லங்கள்!
ஆம். அந்தத்

தெருவெல்லாம் என்னதுதான் ! தெரிகின்ற வீடுகட்கே
உரியவனும் உடையவனும் உண்மையிலே நானேதான்!
இன்னும்பார்!
தெருவெல்லாம் பல கடைகள் திறந்திருக்கும் ;
கடைகளிலே
திருவாயும் மலர்ந்தொளிர சிரித்து வழி பார்த்திருக்கும்
சாளரத்தின் கூட்டங்கள்! சாளரத்தே—
ஆளுக்கு வேண்டுமட்டும் அறுசுவைசேர் நல்லுணவு
குவிந்திருக்கும் கொலுக் காட்சி! குடிப்பதற்கோ—?
முந்திரியைத்
தேக்கி வடித்தெடுத்த தேம்பழத்தின் சோமரசம்!
நாக்குக் கினிப்பூட்டும் நயம் ஜாதிப் பழ வர்க்கம்!
பொல்லாத ஈக்கூட்டம் புகுவதற்குத் தடைவிதிக்கும்
சல்லாத் துணித் திரைகள் ! சல்லாவின் பின்னணியில்

கறந்தெடுத்த புதுப்பாலில் காய்ச்சிவற்ற வைத்தெடுத்த
சிறந்த தனி திரட்டுப்பால்! தெரிகிறதா ?
அதோ அங்கு

'குறைந்தவிலை!' என நம்மைக் கூவி அழைப்புவிடும்
நிறைந்தவொளி விளக்குகளால் நின்றிலங்கும்
விளம்பரங்கள்!

ஆம். அதுதான்—
என்னுடைய கூட்டுறவு இயக்கத்தின் நல்நிலையம்!
மின்னெனவே இயங்குமதன் வேகம் பார்! வேகத்தால்
காசு மலை யாய்க் குவியும் காட்சியைப் பார்!
பார்த்தாயா ?

பேஷ்! இதுதான் மிக அருமை! பேஷ்! இதுவே நம்
பெருமை!
மலை மலையாய்க் குவிந்திருக்கும் வகை வகையாம் நூல்கள்
பல
கலைக் கொலுவாய்க் கண்கவரும் கடைமுன்னால்
நின்றுள்ளம்
மலைக்கின்றேன்!
அஃதென்ன ?
என்பெயரா? மணி மணியாய் எழில்கொழிக்கும்
அப்பெயரும்
என் பெயரா ? ஆமாமாம்! என் பெயர்தான்!
மிக அருமை!
என்னுடைய கவிதையெல்லாம் எனது குடி யரசோடு
பின்னிப் பிணைந்திருக்கும் பெற்றியிதோ காண்கின்றேன்!
ரப்பர் வளைச் சக்கரங்கள் ரஸ்தாவில் உருண்டோட,
செப்பரிய கவர்ச்சியொடு செல்கின்ற வாகனம் பார்!
பார்த்தாயா ?
என்னுடைய மோட்டார்கார்! என் காரில் செல்லுகின்ற
அந்நபர்கள்—யாரவர்கள் ? ஆம். அவரென் மந்திரிகள்!
செந்நிறமாய் நின்றொளிர்ந்து தெரியுமந்தக் கட்டிடத்தில்

உன்னதமாய்ச் சபைகூடி, ஒருமித்துத் திட்டமிட
அன்னவர்கள் செல்கின்ருர்! அருமையுள்ள மந்திரிகாள்!
—ஒரு வார்த்தை!
இனிதமர்ந்து பேசுங்கள்; எனினும் என் மாஸ்கோவின்
நனிசிறக்கும் சோவியத்தில் அணைந்தடைந்து போகாதீர்!
ஆமாம்—ஒரு வார்த்தை!
இன்னும் பார்!.........
இடையில் கைத் துப்பாக்கி ஏந்தி நடைபோடுகின்ற
படைவீரர் தலைவரைப் பார்! பார்த்தாயா?

அதோ அங்கு

சிரிப்பின் களி விளங்க, செம்மை ஒளி துலங்க,
தெரியும் முகங்களைப் பார்! தெரிகிறதா? அதுதான் என்
அருமைத் திருநாட்டின் அஞ்சாத செஞ்சேனை!
என்னை, என்னுடைய எழிற்செல்வத் திருக்குவையை
முன்னின்று காத்தருளும் முன்னணி அப் பட்டாளம்!
சத்தத்தைக் கேட்டாயா? சரிதான்! என் ராணுவத்தின்
உத்தரவு ஒலிக்கிறது! உடனந்தப் பட்டாளம்
வைத்த அடி வழுவாமல் வலம்நோக்கிச் செல்கிறது!
அத்தோடு நானும் உடன் அடியெடுத்து

வைக்கின்றேன்!

இஃதெல்லாம்—
மெத்த மிக அருமை! வெகு அருமை! வெகு அருமை!
பட்டுத் துகில் நீலப் படுதா விரித்தாற்போல்
எட்டிநிற்கும் வானவெளி என் தலைமேல் காட்சிதரும்
கட்டழகு!

ஆம். வாழ்ந்த

காலமெல்லாம் இன்றைப்போல் களிப்பினை நான்

கண்டதில்லை!

வானவெளி வீதியிலே வழுக்கி விரைந்தோடிக்
கானம் இசைத்தலையும் ககனத்து வாகனங்கள்!
ஆகாய விமானங்கள்! ஆம். அவையும் என்னதுதான்!

ஆஹா! மிக அருமை! அருமையிலும் தனி அருமை!
வான்முகட்டைக் கிழித்துயர்ந்து வளர்ந்தோங்கும்
கொடிமரம்போல்
நான் வளர்ந்து சிறக்கின்றேன்! நாட்களை நீ
எண்ணிக்கொள்!
வருகின்ற வாரத்தின் மத்தியிலோர் திருநாளில்
திரிகின்ற விமானமெலாம் திறமையுடன் என் பகைவர்
வரிசையெலாம் தகர்த்தெறியும்! வாகைமலர் சூடி வரும்!
"அஞ்சேல்"என அபயம் அளித்தே எனதருகே
அஞ்சாத படைவீரர் அணிவகுத்துச் செல்வதைப் பார்!
டங்காரம் கணகணக்க டமாரம் ஒலிப்பதைக் கேள்!
'டங்டக்டக்டங்'கென்று டங்கரித்து, டக்கரித்து
சிங்கம்போல் தலைநிமிர்ந்து செருப்பறையின்
இசைக்கொப்ப
எங்கள் படைவீரர் ஏறுநடை பயில்வதைப் பார்!
அஞ்சாத நெஞ்சோடு அணிதிரண்டு தற்காக்கும்
செஞ்சேனை வீரர் குழாம் செல்கின்ற அழகைப் பார்!
நானுன்கு பேராக நகர்வதைப் பார்! முரசொலியின்
கானத்தின் தாள லயம் காலடியில் கேட்பதைக் கேள்!
வீரர்களே! என்னுடைய விரோதியெலாம் உம் பகைவர்!
வீரர்களே! உமையெதிர்க்கும் விரோதிகளே என்
பகைவர்!
ஆரங்கே?

வருவது யார்? அவர் நந்தம் பகைதானோ?
வரட்டும் அவர்! நல்லது தான்! வகைதொகைகள்
அறியாது
மிரட்டுகின்ற பகைவர்படை மிரண்டோடிச் சீர்குலைய
விரட்டிடுவோம்! போர்முகத்தே வென்றிடுவோம்!
மிக அருமை!
'குப்குப்குப்'பென்று குலவையிட்டு முழக்குகின்ற
செப்பரிய எந்திரங்கள் செயலாற்றும் வேகம் பார்!
உறுமுகின்ற என் மோட்டார் உழுபடையின் எந்திரங்கள்
தரும் ஒலியைக் கேட்டாயா? சந்தோஷம்!
பார் அங்கே!

எனது தொழிற்சாலைகளில் எந்திரங்கள் பலப்பலவும்
கணகணவென் றொலித்துப் பல் காரியங்கள்
செய்வதைப்பார்!
அருமையுள்ள எந்திரங்காள்! அயராதீர்! சளைக்காதீர்!
கருமத்தில் தலை சிறந்து கனவேகம் காட்டிடுவீர்!
'கும்'மென்று எதிரொலிக்கும் குரலை இனித் தாழ்த்தாதீர்!
கம்யூனிஸ்ட் இளைஞருக்குக் கண்கவரும் பட்டுடைகள்
பலப்பலவும் மலைமலையாய்ப் படைத்தளிப்பீர்!
அவ்விளைஞர்
கலகலப்பை, சிரிப்பொலியைக் கைம்மாருய்ப் பெற்றிடுவீர்!
இன்னும் பார்!
வனச் செழிப்பின் இலைச்செறிவின் வழியூடு புகுந்து வரும்
இனிமைதரும் மென்காற்று இதம்கொடுக்கும்
சுகத்தைப் பார்!
நனிசிறக்கும் வனமலரின் நறுமணத்தின் சுகந்தம் பார்!
இனிமை இது மிக அருமை! இணையில்லாத் தனி அருமை!
பட்டணத்துக் கப்பாலோ பச்சைநிறப் புல்வெளிகள்!
குட்டிக் குடிசை அதில் கொலுவிருக்கும்; அங்குள்ள
குடிசையிலே விவசாயிக் குழந்தையிளஞ் செல்வங்கள்!
முடியடர்ந்த பெருந்தாடி, முட்டைக்கோஸ்
—இவையுண்டு
தடியூன்றும் பருவத்துத் தந்தைக் கிழவர் அவர்
சுடுநெருப்பின் அருகமர்ந்து சுகமாகக் குளிர் காய்வார்!

அங்குள்ள—
அன்னவர்கள் யாவருமே அதிசமர்த்தர்;
கொழுமுகத்தால்
கன்னிநிலம் உழுவார்; கவிதைதனை விளைவிப்பார்!
கங்குல் இருளகலாக் காலைப் பொழுதுமுதல்
எங்கெங்கு நோக்கிடினும் இரைந்துசெலும் தேனீப்போல்
உழுவார்; விதைத்திடுவார்; உணவெனக்குத்
தந்திடுவார்!
கொழுத்தபசும் பால் கறப்பார்; குளத்தில் மீன்
பிடித்திடுவார்!

அழகிதுதான்! என்னுடைய அரிய புதுக் குடியரசு
வளர்ந்தோங்கிச் செழிக்குமிந்த வளமை மிக அருமை!
வேறுபட்ட நாடுகளோ—? வெறுப்பால் முதுமையினுல்
வீறுகெட்டு வாழ்வதனுல் வெட்டியதோர் சவக்குழியாய்
அந்நாட்டின் சரித்திரமும் அழிந்துவரும்!...
எந்நாடோ—?
இளமை கொழித்துலவி ஏனையபல் நாடுகளின்
வளமுறைக்கு மாறுபட்ட வழியில், துணிவோடு
கட்டுத் தளையறுத்த கற்பனையால் சிருஷ்டிகளைக்
கொட்டி குவித்து வரும்! கோபுரம்போல் நின்றோங்கும்!
ஆமாமாம்!
ஆனந்தத் திருவெள்ளம் அணைகடந்து பாய்கிறது!
ஏனப்பா?— உனக்கும் இதில் இருமடக்குத் தரலாமா?
அற்புதமும் அழகியலும் அமைந்திருக்கும் இவ்வாழ்க்கை
அற்புதமே! மிக அருமை! அருமையிலும் வெகு அருமை!
இனி நாமே—
என்றென்றும் மாருத இளமை நலத்தோடும்
குன்ருத புகழோடும் கொடிகட்டி வாழ்ந்திடுவோம்!
ஆண்டாண்டு தோறும் நம் ஆற்றலெலாம் மிகுந்தோங்க
நீண்ட நெடுங்காலம் நிலை பெற்று வாழ்ந்திடுவோம்!
சுத்தியலின் இன்னிசையை, சொற்கவிதை வாசகத்தை,
புத்திளமைத் திருநாடே! போற்றிப் புகழ்ந்திடுவாய்!



"ஐந்தாண்டுத் திட்டத்தின் போது இந்த இடத்துக்குப் பத்து லட்சம் ரயில் வண்டிகளில் பல விதமான கட்டிட நிர்மாணப் பொருள்கள் வந்து சேரும்; பின்னர் இவ்விடத்தில் ஒரு பெரிய உலோகத் தொழிற்சாலையும், நிலக்கரி ஆலையும் தோன்றும்; பல்லாயிரக் கணக்கான மக்கள் வசிக்கக்கூடிய ஒரு புதிய நகரமும் இங்கு தோன்றும்" என்று சில தொழிலாளர்கள் தமது உரையாடலின்போது பேசியதைக் கேட்டதும், குஸ்நெத்ஸ்க் பகுதிக்குச் சென்றிருந்த கவிஞரின் உள்ளத்தில் மகிழ்ச்சியும், கற்பனையும் பொங்கி எழுந்தன. அவற்றில் உருவான கவிதை இது.

# 5. குஸ்நெத்ஸ்க்கில் நடந்த குட்டிக்கதை

விளதிமிர் மயாகோவ்ஸ்கி

கருக்கிருட்டு; கருக்கிருட்டில் கப்பிக் கனத்த மழைப்
பெருக்கு! குலவையிடும் பேமாரி! விண்முகட்டில்
பருக்கும், சூல்முதிரும் பருவத்துக் கருமேகச்
செருக்கு! அடைமழையின் செயபேரி!

இத்தகைய

சூழ்நிலையில், ஆங்கொருபால் தூங்கிச் செயலிழந்து
பாழ்நிலையில் நிற்குமொரு பழம் வண்டி.

அதன் அடியில்

மழைக்கொதுங்கி நிற்கின்ற மாந்தர் சிலர்.

ஆம். அவர்கள்

உழைக்கின்ற தொழிலாளர் ஒரு சிலர் தாம்!

அவ்வேளை

கொட்டும் பேய்மழையின் குலவைக் குரல் நடுவே,
மட்டுப்படா வெள்ள வாரி முழக்கிடையே

கட்டுத் தளையறியாக் களிப்போடு ஒரு பேச்சு
பட்டுச் சிலிர்த்தாங்கே பரந்தது காண் :

"பார்த்தாயா ?

உழுபடையின் எந்திரங்கள் உருண்டுருண்டுத் தடம் பதிந்து
வழிவகுத்த இந்நிலத்தின் வருங்காலம் அறியோமோ ?
வெட்டவெளி வெம்பரப்பாய் விரிந்து கிடக்குமிந்த
பொட்டலிலே நான்காண்டுப் பொழுதிலொரு கண்கவரும்
பூங்கா வன நகரம் பூத்துக் குலுங்குவதை
நாம் காண்போம்!" என்றந்த நல்வாக்கு ஒலித்ததுகாண்!
கொழுத்துப் பசை பிடித்த கும்மிருட்டு! கும்மிருட்டில்
அழுத்தும் கருநிறத்து அளகச் சுருட் பாரம்
கட்டவிழ்ந்து சரிந்தாற்போல் கனத்துத் திரண்டிருண்டு
கொட்டுகின்ற பேய்மழையின் கொக்கரிப்பு !
குளிர்வாடை !

இந்நிலையில் :
உளைச்சேற்றுத் தரைமீது ஒதுங்கிப் புகல் தேடி,
துளைக்கும் பனிக்குளிரில் சுருங்கி, நடுநடுங்கி
உழைப்பாளர் சிலராங்கே உட்கார்ந் திருக்கின்றார்.
வாட்டும் குளிர்வாடை வாதைக்காய், சுருட்டுத் தீ
மூட்டிக் குளிர் காய முனைகின்றார். அத்தீயோ
செந்நிறத்துப் பொறி சிதறிச் சிறிதே ஒளி சிதறிப்
பின்னர் அந்தப் பேரிருட்டுப் பிழம்பினிலே உயிர் நீக்கும்.
இந்நிலையில் :

ஆமாமாம் ! இந்நிலையிலும் அந்தப்
பொன்னுரையாம் குரலாங்கே பொங்கியெழுந் தேஇருளில்
மின்னலெனப் பளிச்சிட்டு மேலோங்கும் :

" ஆம். இன்னும்

நான்காண்டுக் காலத்தில் நல்வாழ்க்கை கமகமக்கும்
பூங்காவன நகரம் பூத்துக் குலுங்குவதை
நாம் காண்போம் ! நிச்சயமாய் நாம் காண்போம் !"
இந்தவொரு நல்வாக்கை இயம்பியதோர் திருவாயோ—?

கொந்தும், உயிர் குடிக்கும் குருத்துள் வேல்பாய்ச்சும்
குளிரால் பொலிவிழந்து, குருதிநிறம் கரிந்து,
வெளிறித் தோல் வீங்கி வெடித்த உதடுகள்தாம்!
என்ருலும்—
'அன்னவர்கள் தாமுரைத்த ஆசைக் கனவுமொழி
பின்ஞெருநாள் நனவாகும்; பிசகாது' என்னுமொரு
உண்மைதனை அன்னவர்தம் உருக்குத் திருக்கரங்கள்
உலகுக்கே பறைசாற்றும்!

எங்கும் மழைத்தண்ணீர்! ஈரம்! சதசதப்பு!
தங்கியுள்ள இடந்தனிலோ தலைமேல் நீரொழுக்கு!
கங்குல்! முகம் தெரியாக் காரிருட்டு!

இத்தகைய

சங்கடத்தில்......அங்கிருந்தோர் தவித்துடலம் தான்

சுருக்கி,

பசைபோற் குழைந்தீரம் படிந்திருந்த ரொட்டிதனை
அசை போட்டு, தம் பசியை ஆற்றி அயர்ந்திருந்தார்.
கண்ணிருளச் செய்யும்தம் கடும்பசியும், மறந்துமனக்
கண்ணுல் இருள் கிழித்து, காத்திருக்கும் எதிர்காலப்
பொன்னுலகைக் கண்டுள்ளம் பூரிப்பார். சோவென்று
பொழிகின்ற மழையொலியும் புதைந்தடங்க வாய்திறந்து
மொழிகின்ருர்:

"ஆம். இன்னும்

நான்காண்டுக் காலத்தில் நல்வாழ்க்கை கமகமக்கும்
பூங்கா வன நகரம் பூத்துக் குலுங்குவதை
நாம் காண்போம்! நிச்சயமாய் நாம் காண்போம்.

இதோ இந்தக்

காட்டுக்குள் வசிக்கின்ற கரடியெல்லாம் கூண்டோடு
ஓட்டம் பிடித்தோடி உயிர் பிழைக்கும்.

ஏனெனிலோ—?

காட்டை நிலம் திருத்திக் கற்பாறை தனை யுடைக்கும்
வேட்டு வெடி முழக்கம் விம்மும் ; எதிரொலிக்கும் !
கரம்பாய் வெறுந்தரிசாய்க் காணும் நிலப்பரப்பின்
உரம்பாயும் நாம் செலுத்தும் உழுபடையின்
கொழுமுனைகள் !

நெருப்புத் தழல்கக்கி நிலக்கரியைத் தின்றுவக்கும்
இருப்பரக்கன் போலிங்கே எந்திரங்கள் தாம் முழங்கும் !
இம்மட்டோ ?
இந்நிலத்தே எந்திரங்கள் பற்பலவும்
கும்மென்று எதிரொலித்துக் குலவையிட, ஆலை பல
ஜம்மென்று தலைதூக்கும் ! சங்கொலியும் நம்மவரை
வம்மின் எனப்பாடி வரவேற்கும் !
அம்மட்டோ ?......
சீதளஞ்சேர்......பனிவாடை சிலிர்த்து உயிருலுக்கி
வேதனைசெய் *சிவேரியிலே வெப்பம் கொணர்ந்தூட்டும்
சோதியெனப் பன்னூறு சூரியரை, செந்நெருப்பை
ஊதும் கணகணக்கும் உருக்குலையைப் புதியனவாய்ச்
சாதிப்போம் !
நம் நாட்டின் சர்வஜன சங்கத்தார்
அத்தனைக்கும் தனித்தனியாய் அழகியநல் வீடுபல
சித்திக்கச் செய்திடுவோம் ! தின்பதற்கோ—?
தூய வெள்ளை

நிறம்படைத்து, விலை மலிந்து, நிறைமிகுந்த
ரொட்டிகளைத்

தரம்தரமாய் வேண்டுமட்டும் தட்டின்றித் தந்திடுவோம் !
இவ்வாறாய்—
உரம் மிகுந்து வளம்செழித்து ஓங்குகின்ற இந்நிலத்தே
மரம்போன்று வேரூன்றி வாழ்ந்திடுவோம் !
இவ்வளவோ ?
கண்ணெட்டுந் தொலைவரைக்கும் கண்ணுக் கினிய பசும்
பண்ணைவெளிப் பரப்பாய்ப் பார்ப்போம் ; அகமகிழ்வோம்!
அடர்ந்து வளர்ந்த பெரும் அரணியமாம் *டைகாவைத்

---

* சிவேரி : சைபீரியா ("முழுதுமொரு பேய் வனமாம் சிவேரியிலே"—பாரதி)
* டைகா : சைபீரியாவிலுள்ள, உலகிலேயே பெரியதான காடு

தொடர்ந்தே அழித்ததனைத் துரத்தி, *பைகாலாம்
ஏரிக்கரைக் கப்பால் ஏகிடவும் செய்துள்ளம்
பூரிப்போம்; புளகிப்போம்; புதுவாழ்வு கண்டிடுவோம்!''
இவ்வாருய்—
கவிந்துவரும் காரிருட்டுக் கருந்திரையைத் தோலுரிக்கும்
அவிந்தடங்கா ஆர்வமொடு அவருரைத்த சொற்
கேட்டேன்!

''நான்காண்டுக் காலத்தில் நல்வாழ்க்கை கமகமக்கும்
பூங்கா வன நகரம் பூத்துக் குலுங்குவதை
நாம் காண்போம்!''

எனும் அச்சொல்

நான் கேட்டேன்!

ஆம். ஆம். ஆம்!

அன்னவர்கள் சொல்லதனை அப்படியே நம்புகிறேன்.
இந்நிலத்தே அன்னவர்கள் எடுத்துரைத்த பொற்புமிகு
பூங்கா வன நகரம் பூத்துக் குலுங்குவதை
நான் காண்பேன். நிச்சயமாய் நான் காண்பேன்!
ஏனெனிலோ—?

புத்திளமை சோவியத்துப் பூமியினில் இந்நாளில்
இத்தகைய பேரார்வம் இசைந்திட்டோர் இருப்பதனுல்,
இத்தகைய எதிர்கால இன்பக் கனுக்களெலாம்
சத்தியமாய், நித்தியமாய், சாஸ்வதமாய், வாஸ்தவமாய்ச்
சித்திக்கும்! இதில் எனக்குச் சிறிதேனும் ஐயமில்லை!

---

* பைகால்: ஓர் ஏரி (சோவியத் ரஷ்யாவின் தூரக்கிழக்குப் பிரதேசத்தில் உள்ளது.)

“ஒரு சூரியக் கதிரின் பாதை” என்ற தலைப்பில் இந்தக் கவிதையின் ஆசிரியர்கள் இருவரும் சேர்ந்து கூட்டாக ஒரு நீண்ட கவிதையைச் சமீப காலத்தில் எழுதி முடித்துள்ளார்கள். அந்த நெடுங்கவிதை சோவியத் தாஜிக்கிஸ் தானின் இன்றைய வாழ்க்கையைப் பிரதிபலிப்ப தாகும். அந்த நெடுங்கவிதையின் ஒரு பகுதி இது.

# 6. ஒரு கம்யூனிஸ்டின் வாழ்க்கை

மிர்ஸோ துர்சுன் ஸாதே; போக்கி ராக்கிம் ஸாதே
(தாஜிக்கிஸ்தான் கவிஞர்கள்)

உண்மையுள்ள கம்யூனிஸ்ட் ஒருவன்தன்
வாழ்க்கையிலே
கண்டறியும் செயல்புரியும் கடமையிலே வாழ்ந்தறியும்
சம்பவங்கள் ஆனவற்றைச் சவிஸ்தார மாய்உமக்கு
எம்பாவால் இத்தினத்தில் எடுத்துரைப்போம்.........
.........கம்யூனிஸ்ட்
தன்காலம் தனையுணர்ந்த தலைமகனும்; ஆதலினால்,
தனக்களித்த புதுப்பணியைத் தனிப்பணியைத்
தன்மனத்தில்
நினைத்தவனாய், குளிர்ந்ததொரு நிசிப்பொழுதில் காலாற
மனைநோக்கி அவன் நடந்தான்; மாவீரன் போலவனே
வாழ்ந்திட்டான்; அவனுக்கு வாய்த்ததொரு
புதுப்பணியும்
ஆழ்நோக்கும், கண்டிப்பும் அமைந்தஅதி காரிகள் தம்
உத்தரவாம்; ஆதலினால் உயரிடத்தார் வழங்கியதோர்
உத்தரவை நிறைவேற்ற ஓர்தூரத் தலத்துக்கே
ஏகும் கடமையினை ஏற்றிருந்தான்; அவ்வாறு
போகும் இடந்தன்னில் இல்லாத, பொல்லாத
அதிகாரம், தற்பெருமை, ஆர்ப்பாட்டம், தடபுடல்கள்
முதலான சிறுமைகளில் முனையாமல், தன்னருமை
மக்களொடும் ஓய்வின்றி மனப்பயமும் சிறிதின்றி

ஒக்கநின்று சலியாமல் உழைப்பதுவே அவன் கடனும்.
உழைப்பும் இதயத்தின் உறுதியும்தான் வெற்றியினை
அழைத்துவரும் அணித்தாக என்பதையும்
அவனறிவான்.

எதிர்பாரா வகையினிலே எய்தியதோர் புதுப்பதவி
இது ; எனினும் இன்னல்கள், எதிர்ப்புக்கள், சிரமங்கள்
புடை சூழ்ந்த காலத்தும் தளராது போராடி
அடைந்திட்ட திறலாண்மை, அரியபுகழ், கள்ளமற்ற
இதயத்தின் பேரார்வம் இன்னவற்றின் நம்பகத்தால்
பதவியிதை வரப்பெற்ருன் ; இப் புதிய பதவியிலும்
மீட்டுமவன் வேகமுடன் மூர்க்கமுடன் தொலைதூரக்
காட்டினிலே சென்ருங்கே கரத்தாலும் கருத்தாலும்
ஈடுபட்டுப் பணிபுரிவான் ; இன்றைக்கே அவன்வாழும்
நாடும் வனமாய்ஓர் நாளில் இருந்ததுதான்!
மேன்மேலும் முன்னேறிச் செல்வதன்றி வேறுவழி
தானில்லை ; ஆதலினுல், தனிமையிலே இருள்செறிந்த
அரவமற்ற தெருவழியே மனைநோக்கி அவன்நடந்தான்.
இரவினிலே அவன்மனத்தில் எத்தனையோ சிந்தனைகள் ;
சந்தித்த பலமனிதர், சாதித்த காரியங்கள்,
முந்திக் கடந்துவிட்ட வருடங்கள் முதலியவை
எண்ணத்தில் எழுந்தனவே ; இழந்துவிட, மறந்துவிடப்
பண்ணுத எண்ணங்கள் ; பலப்பலவாம் அவற்றினிலே
வெப்பமிலை, தட்பமிலை; வேதனையோ, பெருமகிழ்வோ
கொப்பளித்துப் பொங்கவிலை ; கூறினுல், அவன் வழியில்
பற்பலவாம் படுகுழியும் பயங்கரமும் எதிர்வந்து
முற்படவே எத்தனிக்கும் ; முழுத்தோல்வி அடைவோமோ
என்றஞ்சி மனங்கவன்று ஏங்குகின்ற வேளையிலே
வென்றியுமே எதிர்பாரா விதத்தினிலே வந்தெய்தும்!
உண்மையெனும் தெள்ளியநீர் ஊற்ருல்தன் தாகத்தைத்
தண்மையுறத் தீர்த்திருந்த தகவுடையோன் அவன் ;
அதனுல்,

சிலசமயம் எவனேவோர் சிறுமதியன் அவன்மீது
அலர்தூற்றி அவன் வாழ்வை அழித்தொழிக்கப்
பார்த்தாலும்

அவன் அழியான்; நம்மருமை ஆசிரியன், வழிகாட்டி,
தவப்புதல்வன் மேதை லெனின் தந்ததொரு பேரொளியில்
வீறுநடை போட்டவனும் முன்னேறிச் சென்றிடுவான்...
பாருங்கள்! அதோ அந்தப் பணியாளன் துயிலாழ்ந்த
வீடுகளைப் பின்விடுத்து விரைவாகச் செல்கின்றான்.
பாடுகின்ற மனவரங்கில் 'பருத்தி'யெனும் பாட்டொன்றும்
எழுவதனை உணர்கின்றான்; என்றாலும் ஓரெண்ணம்!
'முழு முட்டாள் கூற்றன்றோ? முற்றிலுமே வெறும்
பிதற்றல்!
விடுமுறைபோல் உழைப்பதுவாம்! மலர்கின்ற
பருத்தியுமாம்!
அடடாவோ! எத்தகைய அபத்தமிது?' பருத்தியினை
வளர்த்துப் பயிராக்குகின்ற வளமையினை அவன்லகுவாய்
விளம்பிடுவான். பருத்தியினை விளைவிக்க எத்தகைய
பெரும்பாடும், பேருழைப்பும் தேவையெனும் பெற்றியினை
அரும்பாடு பட்டுணர்ந்த அவன்நன்றாய்
அறிந்திருந்தான்.
அவன்கரத்தில், தலைமுடியில், அழுக்கடைந்த திருமுகத்தில்
எவண்நாமே பார்த்தாலும் பருத்திக்காய் எவ்வளவோ
பாடுபட்ட உழைப்பன்றோ பதிந்தேறித் தெரிகிறது!
'பாடினராம் பாட்டொன்று! ஹா ஹா ஹா! பாலைவனப்
பரப்பெல்லாம் கணப்போதில் பஞ்சாய் மலர்ந்ததுபோல்
வரம்பற்ற சொல்லடுக்கி வாய்மலர்ந்தார் அப்புலவர்!
வாரும் புலவரையா! வழிந்தோடும் உடல்வியர்வை
நீரதனை முதன்முதலில் நிமிரக் குடித்தால்தான்
பருத்தியுமே தலைதூக்கிப் பஞ்சாகக் காய்க்குமென்ற
கருத்தினையும் ஏன்மறந்தீர்?' என்றவனும்
கனல்கின்றான்!
கட்டுறுதி வாய்ந்திருந்த காளைஅந்தக் கம்யூனிஸ்ட்
வெட்டவெளிப் பாலைவன விவரத்தை நன்கறிவான்.
பாலைவனப் பரப்பதனில் பாடுபட்ட பேருழைப்பின்
கோலமவன் நெற்றியிலும் கைககளிலும் கோடிட்டுக்
காட்டுவதும் அவனறிவான்!
பின்னரவன் கருத்தினில்தன்
வீட்டின் நினைவலையும் மேலோங்கி எழுகிறது:

"வேறிடத்தில் இனிமேலே வேலையாய்ப் போவதனைக்
கூறிநின்றால், விரைவினிலே குடிபெயரும்
சேதிசொன்னால்,
மனையாளும், மாதாவும், மாமியொடு குழந்தைகளும்
எனைநோக்கி என்னென்ன இயம்புவரோ? ஒருவேளை,
வரவும்தான் மறுப்பாளோ மாமியவள்? மனையாளும்,
சிறுவர்களும், தாயாரும், 'சீ! என்ன வாழ்க்கையிது!
காற்றடித்த திக்கெல்லாம் கறங்கிவரும் சருகைப்போல்
மாற்றுவதோ இவ்வாழ்க்கை?' என்றே மனத்துயரால்
முனகுவரோ? வருத்தத்தால் மூச்செறிந்து விம்முவரோ?"
எனவுமவன் எண்ணுகின்றான். என்றாலும், எல்லாமும்
எல்லாரும் பழகிவிட்ட இந்நகரை, தம்புதிய
இல்லத்தை விட்டேகி வேறூர் இடத்துக்குச்
செல்வதெனில் வருந்தாரோ? இங்கோ சிறுவருக்கு
நல்விதத்தில் பழகிவிட்ட விளையாட்டு நண்பர்குழாம்,
பழகிவிட்ட தம்பள்ளி, பரிவோடும் அன்போடும்
அழைக்கின்ற தம்மருமை ஆசிரியர் முதலானோர்
உள்ளதையும் அவன்மனத்தில் உன்னுகின்றான்.
பின்னரவன்
மெள்ளமெள்ள விரலூன்றி வீட்டருகே நடைநடந்து
உள்ளே நுழைகின்றான்; உடைகளையும் வழக்கம்போல்
மெள்ளவே நாற்காலி மீதெடுத்து வைக்கின்றான்.
ஆங்குள்ள அனைவருமே ஆழ்துயிலில் ஆழ்ந்திருக்க
தூங்காத அவனருமைத் துணைவிமட்டும்
விழித்திருந்தாள்!
எப்போது தன்கணவன் இல்லம் திரும்பிடினும்
அப்போதும் விழித்திருந்து அவனையவள் வரவேற்பாள்!
கஷ்டங்கள் நிறைந்ததுதான் கம்யூனிஸ்ட் டின்வாழ்க்கை;
இஷ்டமுள்ள மனைவிமக்கள் எல்லோரும் அவன்வரவைக்
காண்பதுவும் அரியதுதான்! காலைமுதல் இரவுவரை
ஆண்மகனும் அவனுக்கு அலுவல்களோ பலப்பலவாம்!
இந்நிலையில் அவனருமை இல்லாளும் அவனுக்காய்க்
கண்ணிரண்டும் தூங்காது காத்திருக்கத் தான்வேண்டும்!
உள்ளுக்குள் வந்தவுடன் பெற்றுவந்த உத்தரவை

மெள்ளத்தன் மனைவியிடம் நீட்டிஞன்! வேறென்ன
பேசுவது? இடமேது பேச்சுக்கு? பின்னரவன்
ஆசையுடன் தன்மனைவி அருகினிலே சென்றவளின்
கன்னத்தில் முத்தமிட்டுக் களிகூர்ந்தான். அதன்பின்னர்
தன்வீட்டு முகடுதனைத் தலைநிமிர்ந்து, அவ்விடத்தில்
உருக்குலைந்தும் கிழிபட்டும் உபயோகம் அற்றுவிட்ட
செருப்பிரண்டு தொங்குவதைச் சின்னேரம்
பார்த்திட்டான்.

சென்றுவிட்ட பழங்காலச் சீர்கெட்ட வாழ்க்கையினை
இன்றும் நினைவுறுத்தும் எச்சமென, அவன் தந்தை
அச்செருப்பைத் தொங்கவிட ஆணையிட்டுப்
போய்மறைந்தார்.

எச்சமதை அவன்கண்ணுல் ஏறெடுத்துப் பார்க்கின்ற
காலமெலாம், தாதையவன் களைப்புற்ற, உணர்விழந்த
காலிரண்டைக் காண்கின்ற காட்சியே மனத்தோங்கும்!
இதனுலே, அவன் வாழ்வில் எத்தனையோ மேம்பாட்டை,
பதவிகளைப் பெற்றுலும், பழஞ்செருப்பாம்
அவையிரண்டைத்

தந்தையவன் தரித்தவனுய், தடித்துவிட்ட கரந்தன்னில்
கொந்துகின்ற மண்வெட்டி கொண்டவனுய்,
விளைநிலத்தில்

அடியெடுத்து நடக்கின்ற அவலத்தை அச்செருப்பும்
நொடிப்பொழுதில் அவனுளத்தில் நினைவூட்டி
விட்டுவிடும்!......

இன்னும் சிலதினத்தில் இங்கிருந்து குடிகிளம்பி
அன்னவனும் புது இடத்தை அடைந்திடுவான் ;
ஆங்கவனை

எதிர்நோக்கும் பணிமிகவும் சிரமம்தான் என்பதையும்
மதித்தறிந்து கொண்டிருந்தான்...
மற்றும், அவன் இப்போதோ

கண்ணிரண்டால் ஜன்னல்வழிக் காண்கின்றுன் ;
மணிக்கணக்கின்

எண்ணமின்றி நெடுநேரம் இவ்வாறே பார்த்திருப்பான்.
ஏனென்றுல் ஆங்குள்ள இலைதழையும், செடிகொடியும்,
கானகமும், மலரினமும் அவன்இதயம் கவர்ந்தவையாம் !

வருநாளில் தான்சென்று வசித்திருக்கப் போமந்த
ஒருநிலத்தைமனத்தெண்ணி,உட்கார்ந்து, புகைபிடித்துச்
சிந்தனையில் தனைமறந்து செயல்மறந்து இருக்கின்றான்!
அந்தத் தொலைநிலத்தில் அவனை அறிந்தவர்கள்
ஆருமில்லை; என்றாலும் அவ்விடத்தார் இதயத்துள்
நேருறவே புகும்வழியை, நெறிமுறையை அவனறிவான்!
அவரெல்லாம் ஒப்புகின்ற ஆலோசனையளித்தும்,
அவர் யாவும் சம்மதிக்கும் அதிகாரம் தனைப்பெற்றும்,
பணியாற்றல் அவன் பொறுப்பு;பழக்கமிலா அவ்விடத்தில்
துணையேதும் கிட்டாது; துணையாவும் அன்னவரே!
தொண்டதனை எப்படித்தான் தொடங்குவது?
வார்த்தைகளைக்
கண்டறிந்து பேசுவதும் எப்படியோ? கஷ்டம்தான்!
பதினேழு மொழிகளையும் பயில்கின்ற அவரிடையே
பொதுமொழியைக் கண்டறிந்து புரிகின்ற நல்விதத்தில்
எவ்வாறு பேசுவது? எல்லாமே கஷ்டம்தான்!
இவ்வாறு நினைத்தபடி இருந்தாலும், அவன்கலங்கான்.
ஏனென்றால், நண்பனென எல்லோரும் தனையேற்க
தான்தனது வாழ்க்கையையே அவருக்கே தத்தமெனச்
செய்துவிட வேண்டுமெனும் செய்தியினை அவனறிவான்.
'வையகத்தின் சக்தியுன்றன் வசமாக வேண்டுதற்காய்
உலகத்தில் வேர்பாய்ச்சி ஊன்றி நின்றும், மக்களர்தம்
இலகிடும்பே ராற்றலிலும், எல்லையிலா அறிவினிலும்
பங்கெடுத்தும், அவரையெலாம் பாசமொடு நேசித்தும்,
அங்கவர்தம் உறவாலே அரியபல கற்றறிந்தும்,
அவருக்கே உதவிகளும் ஆதரவும் பலதந்தும்,
அவருக்கே வழிகாட்டும் ஆசிரிய னுயிருந்தும்,
அவருளமும்உன்னுளமும்அணைந்தொன்றாய்த்துடிதுடிக்க,
அவர் தோல்வி உன்தோல்வி, அவர்மகிழ்ச்சி உன்மகிழ்ச்சி
என்றாகும் விதத்தினிலே இணைந்துவிட வேண்டும் நீ!
பொன்றாத மனிதகுல வெள்ளமெனும் பொதுக்கடலில்
துளிபோலக் கலந்திணைந்து, சூரியனின் பொன்மயமாம்
ஒளிக்கதிர்போல் அவர்க்கெல்லாம் இதம் அளித்து
உதவுதற்கே
பழகிடவும் வேண்டும் நீ!' என்னுமொரு பாடத்தை
அழகாகக் கம்யூனிஸ்ட் அறிந்ததனால், அவன் கலங்கான்!

# 7. வாஸ்யா மாமா

யேவ்ஜேனி யேவ்துஷேங்கோ

செழிப்பான பசுமிலைகள் செக்கச் சிவந்தொளிர்ந்து
பழுப்பேறும் கார்காலம் ; பனிப்படிவம் கூரையிலும்,
தெருக்களிலும் வழிந்திறங்கித் தேங்குகின்ற காலம்; அதில்
உருக்கென்னும் உறுதியொடு வாஸ்யாவும் உட்கார்ந்து
மனுக்கள், கடிதங்கள், மகஜர் எனப்பலவாம்
தினுசில் தினந்தினமும் ஏதேதோ தீட்டிடுவார்.
உங்களுக்கும் என்றனுக்கும் உற்றவர்க்கும் மற்றவர்க்கும்
அங்கவரும் இலவசமாய் அயராது எழுதிடுவார்.
அக்கறையும் ஒப்புரவும் அடுத்தவர்பால் கொள்ளுமனப்
பக்குவத்தால், பண்புளத்தால் பணியிதனை அவர்புரிவார்.
பொதுநலத்தைக் காக்குமொரு புனிதத் திருவெறியால்
பொதுமக்கள் தேவையெல்லாம் புரிந்திடுவார் ;
அவற்றுக்கே
அட்டவணை தயாரிப்பார் ; அவதியுறும் பிணியாளர்
கஷ்டமெலாம் நீங்குதற்குக் கவனமுடன் புதுமருந்துப்
புட்டிகளை வாங்கிடவும், எல்லோர்க்கும் புதிதான
கட்டிடத்தில் இடம்பெறவும் கருத்துடனே அவர்
முனைவார்.
வயததிகம் ஆனாலும், வாழ்க்கையிலே தோன்றுகின்ற
துயரத்தைப் பொறுமையொடும் பெருமையொடும்
தோற்கடிக்கும்
உறுதியினை வாஸ்யாவும் உள்ளத்தே கொண்டிருப்பார்.
வருதுயரம் எதுவெனினும் வயதான அனுபவத்தால்
தூவென்று தள்ளாமல் துச்சமென எண்ணாமல்
பாவிக்கும் மனப்பாங்கின் பக்குவத்தைப் பெற்றிருப்பார்.
சோம்பல் சிறிதுமிலாச் சுறுசுறுப்போடெந்நாளும்
வீம்புடனே அவர்பிறர்க்காய்ப் போராடி வென்றிடுவார்.
தலைவரவர் *காலினினின் தாடியோடும், உருச்சிறுத்து
மெலிந்திருக்கும் உடம்புடனும், ரயில்வேயில் வேலைசெயும்

* காலினின் : ருஷ்யப் புரட்சித் தலைவர்களில் ஒருவர்.

ஊழியர்கள் அணிந்திருக்கும் பழையதொரு உடுப்புடனும்
வாழ்ந்திருந்தார் என்மாமா வாஸ்யாவும்! என்ருலும்,
எக்காலும் அவரிடத்தே ஏதோவோர் இதமான
பக்குவமும் தாயன்பின் பரிவுணர்வும் குடியிருக்கும்!...
மூப்படைந்தார் என்ருலும் என்றென்றும் முடிவறியா
வாய்ப்பையடைந் தாற்போன்று வாஸ்யாவும்
வாழ்ந்திருந்தார்!

வென்றுவிட ஏலாத வியாதியென முதுமைவரும்
என்ருலும், வாஸ்யாவை எண்ணுகின்ற காலத்தே
தாங்குதற்கு முடியாத தவிப்புத்தான் நம்மிடத்தே
ஓங்கிக் குறுகுறுக்கும்; உள்ளத்தை வதையுறுத்தும்!
துன்பத்தின் வேதனையை, துயரமிகு வாழ்நாளைக்
கண்கொண்டு பார்த்தவர்தான்! என்ருலும் கருணையினை
நெஞ்சினிலும் துணிவினிலும் நிறைத்தவரும்
வைத்திருந்தார்!...

இரயில்வேயில் கடைவகுப்புப் பெட்டியிலே
பணியாளாய்த்

துயில்மறந்து, எந்நாளும் துணைசென்று, தொண்டாற்றி,
உருசியத்தின் செய்தியினை உருசியத்தின் மண்ணெங்கும்
வரிசையுடன் கொண்டேகி வாழ்ந்தவர்தான்
வாஸ்யாவும்!

வாழ்நாளில் அவர்கண்ட வாதனைகள், கொடுந்துயரச்
சூழ்நிலைகள் எத்தனையோ? சொல்லில் அடங்கிடுமோ?
உலகில்இரு யுத்தங்கள்; உள்நாட்டில் யுத்தங்கள்;
கலகங்கள்; எப்போதும் மரணத்தின் கடுங்கோலம்!
ராணுவத்தின் காலோசை; நாசத்தால் நாடெங்கும்
பேணுகின்ற பெற்ருேரை இழந்திட்ட பிள்ளையர்கள்!
கண்ணிழந்து குருடான சிப்பாய்கள் தெருக்களிலே
பண்ணிசைக்கும் கீதங்கள்; உருசியத்தின் பரப்பெல்லாம்,
நெடுகிலுமே பெருங்கூட்டம் நடந்துசெலும் பேரோசைக்
கிடுகிடுப்பு! இதனேடு வாஸ்யாவும் கீழ்மேலாய்ச்
சென்றிட்டார்! வைத்தியராய், செவிலியாய்,
சிசுப்பேற்றை

நன்ருக்கும் தாதியராய், நற்பேச்சு வீரரெனப்
பலப்பலவாம் பணிபுரிந்தார்! படுந்துயர வேதனையால்

புலம்புகின்ற இதயத்தின் புண்ணாற்றும் வழிகண்டார்!
காதலர்தம் பூசலினைக் கண்டுணர்ந்து, அவர்க்கிடையே
மோதலினைத் தவிர்த்தவரை மீண்டும் முயங்கவைத்தார்!
ஆதரவை இழந்திட்ட அனாதைகட்கு 'சூப்' பளித்தார்!
சேதமுற்ற அங்கமுடன் சீவித் திருந்தார்க்கும்
பக்கத் துணையிருந்தார்! பங்கீட்டு உணவதனை
மக்களுடன் பகிர்ந்துண்டார்! அஃதேபோல்
மனத்தெழுந்த
அற்புதமாம் கனவுகளை அனைவருக்கும் எடுத்துரைத்துப்
பற்பலவாம் துணைபுரிந்தார்! அவர் செய்யும்
பணியனைத்தும்
நன்மைகளை விளைவிக்க, நன்மைகளை நன்குற்றும்
தன்மையொன்றே தம்பணியாய், தாகமெனக்
கொண்டிருந்தார்!
ஓய்வென்ப தவர்க்குண்டா? இல்லையில்லை! ஊருக்கே
ஓயாமல் உழைத்துநலம் உண்டாக்கிக் களித்திடுவார்!
நள்ளிரவு வேளையிலும் நாளெல்லாம் அவர்வீட்டில்
வெள்ளிமுளைத் தாற்போன்று சன்னலிலே விளக்கெரியப்
பார்த்திடலாம்! நட்புறவும் பரிவுணர்வும் அவ்வொளியில்
நேர்த்தியுடன் ஒளிர்வதனை நேரேநாம் கண்டிடலாம்!
எந்நேரம் வாஸ்யாவை யாம்காண நேர்ந்தாலும்
அந்நேரம் எல்லாமும் அறிவுறுத்தல், கண்டித்தல்,
வாதித்தல், வழக்குரைத்தல், வந்தவர்க்கு உதவிடுதல்,
போதித்தல் எனப்பலவாம் செயல்களையே
புரிந்திருப்பார்!
முடிவில்லாத் தற்பெருமை முழக்கமிடும் சிலபேர்கள்
எடுபிடியாய்த் தன்னலமே எண்ணிடுவார்! வாஸ்யாவோ
மனுக்கள், கடிதங்கள், மகஜர் எனப்பலவாய்
தினுசில் உறுதியொடு எந்நாளும் தீட்டிடுவார்!...



# 8. ஒக்காட்ஸ்கிலுள்ள ஆர்க்டிக் கடற்கரையில்

ரிம்மா காஜகோவா

அந்நிலத்தின் கடற்கரையை, அலைவீச்சை, காலநிலை
தன்னை, தொழிற் சாலைகளை, தங்குபல வீடுகளை
நானறிவேன் ; அவற்றையெல்லாம் நன்கறிவேன் ;
அந்நாட்டில்
வானம் புலருகின்ற வளமையெல்லாம் நானறிவேன் !
காலைக் கதிராங்கே கண்ணை உறுத்தாமல்
மேலெழும்பும் ; வைகறையும் மெல்லமெல்லத்
தான்புலரும் !

நடுக்கும் பனிப்புகையின் நடுவில்அவர் கண்விழிப்பார் !
படுக்கின்ற வேளையிலே பனிப்புயலும் ஊளையிடும் !
சாளரங்கள் மஞ்சள்நிறத் தாளைப்போல் வெளுத்திருக்க
வீழுபனிப் படிவிலதன் விளிம்பெல்லாம் புதைந்துவிடும்!

அன்னவர்கள் கடற்கரையில் அன்போடு கரம்நீட்ட
முன்னிற்கும் நாய்க்கூட்டம் விருப்போடு தாவிவரும் !
சரளைச் சிறுகற்கள் சார்ந்திருக்கும் கடற்கரையில்
உருளைக் கிழங்கோடு உள்ளியுமே முளைகாட்டும்!

இரவெல்லாம் நெடிதாக, இரவியொளி அரிதாக,
வரும்புயலும் பெருங்காற்றும் கொடுங்குளிரை
வரவழைக்கும் !
அந்நாட்டுக் கடற்கரைஎன் அருகில்லை யென்றாலும்
எந்நாளும் அதையெண்ணி முதுமையிலும் இன்புறுவேன்!

வீசிவந்த கடற்காற்று விளாசியது பனிப்புயலை !
மோசநிலை மீனவர்தம் வலைகளுக்கே முற்றியது !
சீறும்அலை மீனவர்மேல் சினந்தெழுந்து, அவர் கரத்தைக்
கீறியதைப் புண்ணாக்கிக் கிழித்து வருத்தியது !

என்றாலும் அன்னவர்தம் இதயமொடு ஆத்மாவும்
குன்றாமல் அதையெதிர்த்துக் கொடியுயர்த்தி நின்றனவே!
இன்னபிற தொல்லைபல இடையிடையே நேர்ந்தாலும்
அன்னவர்கள் வாழ்க்கையிலே அழுக்காறு சேரவில்லை.
எஞ்சியுள்ள புகையிலையின் இறுதித் துணுக்கினையும்
வஞ்சமின்றித் தமக்குள்ளே பங்கிட்டு வழங்கிடுவார் !
கையிருப்பில் உள்ளசிறு ரொட்டியையும் கருத்தோடு
பையவே செலவழித்துப் பத்திரமாய்க் காத்திடுவார் !

நெடிமிகுந்த, புட்டிகளில் நிறைந்திருக்கும்,மதுவகையைக்
குடித்துவிட்டு அவரங்கே கும்மாளம் போட்டிடுவார்!
என்றாலும் நிதானத்தை இழக்காது, தொழில்முறையில்
குன்றாமல் அவற்றையொரு குறைவின்றிச் செய்திடுவார்!

மீன்பிடித்தல், பயிர்செய்தல், வேட்டைபல ஆடிவரல்,
தான் இருக்க வீடுகளைத் தானமைத்தல் என்றுங்கே
பலப்பலவாம் தொழில்களையும் பம்மாத்துப் பண்ணாமல்
அலுப்பின்றி எந்நாளும் ஆர்வத்தோ டாற்றிடுவார் !
இன்பினிலும் துன்பினிலும் அவர்தமக்குள் இணைபிரியா
அன்புடனே பிணைப்புற்றுக் கருமங்கள் ஆற்றிடுவார் !
வருவதுவும் போவதுமே வழக்கமெனக் கொண்டிருக்கும்
சிறுமனிசர் தமைமட்டும் வெறுப்புடனே சீறிடுவார் !

வாய்திறந்து அவருரைக்கும் வார்த்தையெலாம் பழுதாகப்
போயதில்லை! வாழ்க்கையிலே பொறுப்பறிந்துகுறிப்பறிந்து
தங்கடமை தனையாற்றத் தவறிவிடும் மாபாவச்
சங்கடத்தைக் காட்டிலுமே சாவினையே மேற்கொள்வார் !

நம்முன்னே நிற்பதெலாம் நாடதனின் மானிடன் தான்!
செம்மாந்து இறுமாந்து சிரம்நிமிர்ந்து நின்றாலும்
அம்மனிதன் தன்னுளமோ மென்மையதாய் ஆனதுதான்!
சும்மா நான் சொல்லவில்லை ! சொல்லுமந்த கடற்கரையை
நானறிவேன்! அந்நாட்டை நன்கறிவேன் ! அறிந்ததனால்
ஆனந்தம் பெருமையெலாம் அடைகின்றேன் !
அடைகின்றேன் !

# 9. வானம்

நிக்கோலாய் அசயேவ்

இறந்தேகும் நெடுங்காலத் திருளாழம் தனிலோர்நாள்
எடுத்தெறிந்த ஆலயத்தின் எச்சமச்சம் போலாங்கே
விரைந்தேகும் கண்ணாடிக் கோலியென விரிவானம்
வெண்முகிலின் முகட்டிடையே வெளிரிட்டுக் காட்சிதரும்!

அச்சமிலாச் சிந்தனையும் அற்புதமாம் உணர்ச்சிகளும்
அமைந்திருக்கும் கவிதையெனும் ஆலயம்தான்!
ஐயமில்லை!
உச்சத்தே எட்டாத உயரத்தே நெடுந்தொலைவில்,
உலகின்மேல், ஒற்றையிலே ஊசலிடும் காரியம்தான்!

விரைந்தேகும் கண்ணாடிக் கோலியென விரிவானம்
வெண்முகிலின் முகட்டிடையே வெளிரிட்டுக் காட்சிதரும்!
இருந்தாலும், எதனையுமே எதேச்சையுடன்
காண்பவர்க்கோ
ஏகாந்தப் பெருவெளியின் சூனியம்தான் இவ்வானம்!



# 10. ரோமியோ-ஜூலியத்

நிக்கோலாய் அசயேவ்

பற்பலவாம் குழப்பத்துள் பட்டுழன்று நாளும்
பரிவினுக்கே ஆளாகும் மானிடரே! பாரில்
அற்புதமாம் கவிதைகளும், அழகியநற் கனவும்,
அணிந்துரையும், புனைந்துரையும் அவையாவும் இன்றி
கடைந்தெடுக்கும் பட்டறையும் கணக்கிடும்எந் திரமும்
கணகணத்து விம்முகின்ற காசினியில் நீவிர்
அடைந்திருக்கும் வாழ்விதனில் அகந்தனிலே என்றும்
அலுப்பின்றிச் சலிப்பின்றி வாழ்வீரோ ? அந்தோ !

மோனத்து லயசுகத்தில் மூழ்கி, தலை யசைக்கும்
மோகனமாம் பசுமைநிறை புல்லிதழ்கள் இன்றி,
வானத்துச் சுடர்போல ஒளி வாரி வழங்கும்
வண்ணமலர் ஆயிரத்தின் வடிவழகும் இன்றி,
இனியமணம் தனைப்பரப்பி, இளம்வாயும் மலர்ந்து
எழில்விரிக்கும் பூக்களின்றி இருந்திடவும் போமோ ?
இனியுமென்ன தாமதமோ ? இமைதிறப்பீர் ! எங்கும்
இறைந்திருக்கும் பேரழகை எட்டுமட்டும் பாரீர் !

காதில்விழும் ஒலியனைத்தும் கவனமுடன் கேளீர் !
காசினியில் காண்டரிய அற்புதமாம் இஃதே !
ஈதனைத்தும் நீர்கண்டால், நீர்கேட்டால், என்றும்
இவ்வாழ்வில் பெறும்பரிசுக் கிணையேதும் இல்லை !
கன்னியெழில் பொழியுமிந்தக் காலையிளம் போது
கையெடுத்து அரவணைக்கும் காட்சியினைக் காணீர் !
முன்னிவிரைந் தேகுமிருள் மூட்டத்தை ஆங்கே
முகமனொடு செலவிடுக்கும் பனித்துளியும் பாரீர் !

வான்பாடும் குருவியினை, குயிலதனைப் பற்றி
வாயாடி, வழக்காடி, வளர்ந்தோங்கும் காதல்
தேன்பொழிந்த ஜூலியத்தின், ரோமியோவின், என்றும்
தீராத வழக்கைக்கண் திறந்திங்கே பாரீர் !

# 11. கோடையின் முடிவு

நிக்கோலாய் அசயேவ்

கரடும் மெருகும் கலந்திடும் என்றன்
கவிதைகள் யாவும் காட்டுப் புல்வெளிப்
பரப்பின் வெம்மையும் குளுமையும் கலந்து
பக்குவம் செய்த படைப்புகள் ஆகும்!
துயரொடு கரடும், துவர்ப்பொடு மெருகும்
துணையுறப் பிணைத்துச் சுருட்டியே, குளிரும்,
வியருறும் கொதிப்பும் விரவிக் கலந்து
விளையாட் டயரும் படைப்புகள் ஆகும்!

இவ்விளை யாட்டை மானிடன் இங்குதன்
இஷ்டப் படியே தேர்ந்தான் இல்லை!
தவ்விடும் அண்ட சராசரத் தோடு
ஜகமே ஆடுமோர் சம்பவம் ஆகும்!
இவ்வித மாய்என் கவிதைகள் யாவும்
என்றும் உலகை இயக்கிக் கறங்கும்
செவ்வியின் காலச் செல்கதி யோடு
சேர்ந்தே இயங்கும் சிறப்புடைத் தாகும்!



# 12. கம்பங் கதிர்கள்

அலெக்ஸாந்தர் த்வர்தோவ்ஸ்கி

கம்பங் கதிர்கள்! கம்பங்கதிர்கள்!
கம்பங் கொல்லைக் காடுகள் வழியே
சுற்றி வளைந்தோர் பாதையும் தொடரும்!
மற்றுமப் பாதையின் மார்க்கமும் எங்கே

முடிவுறும் என்பதும் யாரே மொழிவார்?
படிவுறச் சாய்ந்த வயல்களின் மேலே
அணியாய் நிற்கும் தூண்களை அணைத்துத்
தணிந்தே தொங்கும் தந்திக் கம்பிகள்!

கதிர்கள்! கம்பங் கதிர்கள்! கண்கள்
எதிர்செலும் பெருந்தொலை எல்லையும் தாண்டி
ஆழ்ந்த நீலத் தடிவான் வரைக்கும்
சூழ்ந்தும் பரந்தும் தோற்றும் கதிர்கள்!

குதிரைக் காரனின் கோடைத் தொப்பி
மெதுவாய்க் கீழும் மேலும் குதிக்கும்;
மண்ணும் தூசியும் மண்டிய வண்டி
கண்ணுக் கெதிரே ஊர்ந்தே கடக்கும்.

வளைக்கும் மடல்கள் மலிந்து கனக்க,
களைத்துச் சோர்ந்த கதிர்கள் அறுவடைப்
பருவம் நெருங்கும் பக்குவம் எய்தும்!
பரவித் தோற்றும் நெடுவயற் பரப்பின்

பாரம் அனைத்தையும் பாதையே தாங்கக்
கோரிடும் என்னக் குனிந்தே நிற்கும்!
அசைந்தும் மெல்லென ஆடியும் தோற்றும்
பசும்பொன் கதிர்கள் பாரம் மிகுந்து,

வண்டிகள் மீது வழிந்தே பொங்கும்
உண்டியின் நெருக்கம் உற்றுற் போலே,
தரையும் இனிமேல் தாங்குதற் கொண்ணு
நிறையாய் மிகுந்து நெருங்கும்; பிதுங்கும்!

# 13. உறுதிபட்ட கருத்தொன்று என்மனத்தே உண்டுண்டு !

அலெக்சாந்தர் த்வர்தோவ்ஸ்கி

உறுதிபட்டு வேரோடி உட்புகுந்தே என்னுளத்தில்
அறுதியிட்ட கருத்தொன்று : வாழ்க்கையிதன்
அளவெல்லை
அருகில்லை ; காலமெனும் அகண்டபெருஞ் சாகரத்தே
ஒருநதியே இவ்வாழ்க்கை ! என்பதை நான்
உணர்ந்திட்டேன் !
இந்நதியின் போக்கறிந்து என்வாழ்க்கைப் படகதனை
முன்னடத்திச் சென்றிடுவேன் ! இவ்வாழ்க்கை
முழுமையுமே
என்னதுதான் ! வாழ்க்கையிதன் இன்பங்கள், துன்பங்கள்,
நன்னயங்கள், புன்னிலைகள், நற்சுகங்கள், இடர்ப்பாடு
என்பதெலாம் என்னதுவே ! இவ்வாழ்வில் இளையவனாய்,
பின்பொருநாள் முதியவனாய் நான்மாறும் பெற்றியினால்,
இந்நாளும், இனிவருமோர் எதிர்கால நாள்பலவும்
என்னதுவே ! என்பதையும் என்னகத்தே
உணர்ந்திட்டேன் !

காலம்தான் வாழ்க்கையிதன் கருவூலம் ; அரியபொருள்
போலுமிதன் ஒவ்வொருநாட் பொழுதையுமே பயனுறுத்தி
வாழ்ந்திடுவேன் ! வாழ்க்கையிது குறுகியதாய்,
வழிநெடுகப்
பாழ்நொடிகள் நிரம்பியதாய் இருந்தாலும், பாதையதை
நேர்படுத்தும் வழிகாண்பேன் ! நில்லாதும் நிலைக்காதும்
ஓர்போக்கில் ஓடுவதே வாழ்வியலின் ஒழுங்காகும் !
ஆனதனால், செயல்திறமை அற்றுவிட்டால் வாழ்க்கைநதி
தானழியும் ; வற்றிவிடும் ; தம்பிக்கும் ! என்றிடுமோர்
அறுதியிட்டு வேரோடி ஆழ்ந்திறங்கி உரமேறி
உறுதிபட்ட கருத்தொன்று என்மனத்தே உண்டுண்டு !

## 14. என்னை நாளும் பிடிக்காதே!

பேர்தி கேர்பாபயேவ்
(துருக்மேனியக் கவிஞர்)

கிண்டலுக் குரிய பொருளானேன்;
கிழமாய்க் காட்சி தருகின்றேன்.
வெண்தலை நரையை அவர் பார்ப்பார்;
எனினும் வெட்கம் நான் கொள்ளேன்.
வெகுமரி யாதை அவர்காட்டி,
யாஷுலி என்றெனை விளம்பிடினும்
வெகுநெடும் பாதை எனக்கின்னும்
விரைவிற் கடந்த தாய்ப்படுமே!
'ஓய்வு பெறுங்கள்; வாருங்கள்;
உட்கார்ந் திருங்கள்; நெடுந்தூரம்
போயலுத் தீர்; உம் பழந்துணியின்
புழுதியைத் தட்டிப் போடும்' என
எனக்குப தேசம் செய்கின்றார்;
எனினும் புத்தி சாலிகளோ
'உனக்கே வயது ஆகிறது'
என்றே உரைப்பார்; பாரார்கள்.
ஏனெனில் என்றன் பாதையிலே
முதுமைப் பருவம் எனைத்தொடர்ந்து
நான்செலும் வேகம் தனைமிஞ்சி
என்னை நாளும் பிடிக்காதே!



# 15. மாஸ்கோ இரவுகள்

எம். மாட்டுசோவ்ஸ்கி

காலையொளி தோன்றுமட்டும் துயில்கலையாக் காவனத்துச்
சோலையிலோர் இலைகூடச் சலசலக்கத் தோன்றவில்லை ;

மேலெழும்பிப் பறவையொன்றும் சிறைவிரித்து
விரையவில்லை.
காலையிலே துயிலெழுப்பும் கதிரவனும் அரவணைக்கும்
இத்தகைய மாஸ்கோவின் எத்தனையோ இரவுகளை

எத்தகைய காதலொடு நான்விரும்பி இருந்திடுவேன் !
சந்திரனின் வெள்ளிமயச் சல்லா நூலிழைபோல்
உந்தியெழுந் தமைதியுடன் ஓடுகின்ற சிற்றோடைக்
களகளப்பு ; அற்புதமாய்க் காட்சிதரும் இத்தகைய

இளவேனில் இரவிதனில் என்றனது இதயத்தில்
புனலதன்றன் இன்னிசையும் புகுந்துவந்து போவதையும்
கேட்கின்றேன். நீயேனோ கீழ்நோக்கிப் பார்க்கின்றாய் ?
நாட்புலரும் வேளையிது நாமிருவர் பிரிகின்ற

நேரமதை நமக்கருகே நெருங்கிவரச் செய்கிறதோ ?
பாரமென என்னுளத்தை அழுத்துகின்ற பற்பலதை
விடுவதுவும் சிரமம்தான் ; சுமப்பதுவோ வெகுசிரமம் !
விடிந்துவிடும் வெகுவிரைவில் ; விடியற் கருக்கலொளி

மங்கி வெளிறிவிடும் ; என் அன்பே ! மாஸ்கோவின்
கங்குல் இரவுகளை, உண்மைமிகும் நம் காதல்
உறவுதனை எந்நாளும் உளந்தனிலே நினைவுறுத்தி
வருவாய்நீ என்றேநான் மதிக்கின்றேன்; நம்புகின்றேன்.

# 16. இயக்கும் சக்தி

கிளேப் பாகிரேவ்

வெளிர்காலைப் பொழுதினிலே வேலைக்குச் சென்றாலும்,
விருந்துண்டு மகிழ்ந்தாலும், வீட்டுக்கு விரைந்தேகிக்
குளிர்முகத்து மனைவியொடும் குழந்தையொடும் முத்தாடிக்
குலவிமகிழ்ந் திருந்தாலும், குழலூதிக் களித்தாலும்,
அழுதாலும், சிரித்தாலும், அகமகிழ்ச்சி பெற்றாலும்,
அன்பொன்றே வாழ்க்கையிதன் அர்த்தத்தை,
சுவையதனை
முழுதாக நமக்குணர்த்தும் மூலசக்தி முறையாகும்!
வீடொன்றைச் சமைத்தாலும், வெண்பனிதோய்
துருவத்தை
வெற்றிகொள முனைந்தாலும், வீறுகொண்ட அணுத்துகளை
வேலைக்குப் பழக்குமொரு வினைதன்னைச் செய்தாலும்,
எற்றி விரைந்தோடும் ஏவுகணை தனைவிண்ணின்
எண்ணற்ற தாரகைமேல் ஏறிவர விடுத்தாலும்,
கற்றைத் திரையெறிந்து கனைத்துப் புடைபுடைக்கும்
கடலாழந் தனைமூழ்கிக் கண்டறிந்து வந்தாலும்,
மற்றிந்த வையகத்தில் மானிடர்கள் யாவரையும்
வசப்படுத்தி ஆட்டுவிக்கும் மகாசக்தி அன்பேயாம்!
என்றைக்கு மானிடமும் இவ்வுலகும் எழுந்ததுவோ,
என்றைக்கு ஆதாம்தன் இன்னுயிரைப் பெற்றானோ,
என்றைக்குப் படைப்புலகில் இயங்கத் தொடங்கியதோ,
அன்றைக்கே அன்புலகை ஆக்கிப் படைத்ததுகாண்!
கதிரவன்தன் ஒளிசிதறும் காலம் மட்டும், வீசி வரும்
காற்றுலகில் மூச்செறியும் காலம் மட்டும், இவ்வுலகில்
இதுநடக்கும்! ஆமாமாம்! இவ்வுலகின் அடிப்படையாய்
என்றென்றும் அன்பொன்றே இறப்பின்றி இருந்துவரும்!
எண்ணுங்கால், நம்முடம்பின் இரத்தத்தில் நெருப்பாக
எரிகின்ற அன்புசெயும் இயக்கத்தி னால்நாமும்
விண்ணரங்கில், காற்றுமிலா வெளிப்புறத்தில்
பாதைகண்டு

விரைந்தோடிப் பறந்தோடி விளையாடி வந்துவிட்டோம்!
அந்நெருப்பு இல்லையென்றால், அவிந்திட்டால், சிறுகுடிலை
ஆக்குதற்கும் இவ்வுலகில் யாராலும் ஏலாது!
இன்னிசையோ, தந்திதரும் இசையோ, நம் கண்டத்தில்
எழுந்திடுமோர் நல்லிசையோ எதுவுமிங்கு பிறவாது!
அவனியிலே உள்ளதெலாம் அன்புக் கரங்களினால்
ஆக்கிப் படைத்தவைதாம்; அழகான தோட்டங்கள்,
கவினோடு பெருமிதமும் கலந்துநமை கவர்ச்சிக்கும்
காந்தசக்தி யந்திரங்கள், காணுகின்ற பிறவெல்லாம்
அன்பின் படைப்புகளே! அன்பின் தலைசிறந்த
அருமந்த புத்திரனும் அவனியிலே மானிடனே!
அன்பில்லாப் பகைக்குணமோ அலிப்பிறவி! ஆதலினால்
அக்குணத்தில் பயனில்லை! ஆக்கமில்லை! ஊக்கமில்லை!
அல்லல்மிகும் நம்யுகத்துச் செல்வங்கள் அத்தனையும்
அன்பீன்ற செல்வம்தான்! அன்பகன்று போனாலோ
தொல்லுலகம் அத்தனையும் தூளாகித் தானழியும்!
தொன்றுதொட்டு அளப்பறியாத் தோள்வலியால்,
கடுமுழைப்பால்
மானிடர்கள் படைப்பித்த மாட்சியெலாம் ஓர்நொடியில்
மறக்கொடிய போர்வெறியில் மாண்டுபட்டு, மண்ணுலகில்
சூனியமே மிஞ்சிநிற்கும்! ஆனாலும், சோதிமிகும்
சுடரறிவின் தீப்பந்தம் நின்றெரிந்து ஜொலிக்கிறது!
வாழ்க்கையது என்றென்றும் வழிநடந்து செல்கிறது!
வையகமும் சிறுபிள்ளைத் தனம்விடுத்து வளர்கிறது!
காழ்ப்புதரும் பகைக்குணத்தை அன்புவெற்றி காண்கிறது!
காசினியில் மானிடமும் கற்றுயர்ந்து வாழ்கிறது!
வீழ்ச்சியுறும் வெறிக்குணமோ வெற்றிபெறும் அறிவுவழி
விட்டொதுங்கித் தோற்றோடுங்கி விலகிப்பின் செல்கிறது!



## 17. என்னரும் உலகமே!

பெட்ரூஸ் புரோவ்கா

என்னரும் உலகமே! எத்தனை யுகங்களோ
ஏகினும் நின்னுடை இளமை குன்றிலாய்!
நின்னரும் குழந்தைநான் நிலைத்திடும் வரையிலென்
நெஞ்சின் காதலும் நீங்கிடக் காண்கிலாய்!
புராதன உலகமே! உன்னரும் புந்தியில்
புதைந்துள மாபெரும் பொருட்குவை எத்தனை!
தராதலம் நீஎனக் களவிலாத் தனத்தினைத்
தந்தனை! தயாபரி! வந்தனை தந்தனம்!
ஆயினும் ஓர்குறை; யான்மிகப் போற்றுமென்
ஆயுளும் ஒன்றே ஒன்றென அளித்துளாய்!
தாயே! ஆதலின் ஒருவரம் தந்திடு!
தாரணி வாழ்வில்நான் தங்கிடும் நாட்களை
நீளுறச் செய்திடு! நேரம் வருமுனம்
நீணிலம் விட்டியான் நீங்கிடா வண்ணமென்
வாழ்வினை நின்னருள் வழங்குமேல், அம்ம!என்
வாழ்க்கைக் கடமையை ஆற்றிட வல்லனேன்!
மானிடர் அறிவதன் மகத்துவம் அறிவை நீ!
மலைப்புறச் செய்திடும் மாபெரும் பணியையும்
தானவர் சுலபமாய் ஆற்றிடும் சாதனை
தானும்நீ அறிகுவை! தாரணீ! நின்னெழில்
மேனிலை எய்திட மேலும்யாம் செய்குவோம்!
விண்ணிடைத் தொலைவினில் விளங்குறும் தாரகை
மீனெடும் ஆங்குநீ தொடர்பினை மேவிட
வேண்டிய யாவையும் யாமே செய்குவோம்!
என்னரும் உலகமே! எமக்குநீ அருள்செயும்
இன்பினைக் காத்திட எண்ணியே, விண்ணிடை
மின்னிடும் இடியினுள், நெருப்பினுள் மேவி யான்
வினைத்தவை பலப்பல! மேலும் உன்றனை
அழித்திடத் துடித்திடும் ஆணவ வெறியர்தம்

ஆபத்தைத் தவிர்த்துனக் கபயம் அருளவும்
எழுச்சிபெற் றடியனேன் எழுகுவேன்! நினக்கொரு
இன்னலும் நேர்ந்திடா தென்றும் காக்குவேன்!
என்றுமே சோம்பி இருந்திடா மனிதனின்
இதயநம் பிக்கையும், வாழ்க்கையும், இப்புவி
மன்றிலே அவன்செயும் மாபெரும் படையலும்
மாண்புடன் வாழிய! மாநில மே!உனை
இன்றுயான் வேண்டுவ தொன்றே ஒன்றுதான் :
என்புவி வாழ்க்கையை நீளுற இயற்றுவாய்!



# 18. அன்னையின் பிரிவு

காய்சின் குலியேவ்

என்னைப் போலவே, எனக்கு முன்னர் தம்
அன்னையை இழந்தபல் அபாக்கிய சாலிகள்
எத்தனை இருப்பினும், அன்னவர் அன்னையர்
அத்தனை மோசமாய் அமைந்திலர் என்குவேன் !
ஆங்கவர் முகந்தனில் ஆழ்ந்த சிந்தனை
தேங்கினும், துயருறும் திரைப்பனி மூட்டமும்
பொருந்திடும் ; என்னிரு நெற்றிப் பொருத்தினில்
தெரிந்திடும் பனியென ஆங்கது தெரிதரும்!
அன்னையின் கரங்களே! அடியனிந் நாள்வரை
உன்னரும் கரம்தரும், உதவும் ஆற்றலை
இன்னதென் றுணர்ந்திலேன்! இற்றைநாள்
வரையிலும்
அன்னையர் தமையிழந் தலமறும் சோதரீர்!
இன்றேடும், என்னுயிர் ஏகிடும் நாள்வரை
ஒன்றி,உம் துயரினில் நானும் உருகுவேன் !
அன்னையர் தமையிழந் தலமறும் சோதரீர் !
என்னையும் உங்களில் ஒருவனாய் ஏற்குமின் !
உங்களின் துயர்தனில் நானும் ஒருவனாய்ப்
பங்குறச் செய்யுமின்! பாரில்நம் அன்னையர்
தம்முடை வாழ்க்கையில் ஒரேயொரு தடவைதான்
நம்மினைப் புண்படச் செய்குவர்! நானுமப்
புண்ணுடை மனத்தினேன்! கத்தியால்
போழ்ந்ததோர்
புண்ணினும் ஆழமாய்ப் போயதோர் புண்ணதே !

# 19. காதலைப் பற்றி

ஐ. செல்வின்ஸ்கி

இறந்தோ, கண்மறைந்தோ, நானொருநாள் ஏகிடின்,நீ
வருந்தியழப் போவதில்லை; வாராதுனக்கு அவ்வழுகை!
உன்வாழ்வின் திரும்புமுனை யானல்ல; உண்மை இது.
உன்வாழ்வு நானின்றேல் ஒன்றுமற்றுப் போகாது.
உன்னிதயப் பெட்டகத்தின் உள்ளேயோர் மரங்கொத்தி
தன்னலகால் வாழ்க்கையின்நற் செய்தியினைத்
தட்டுவதும்
எனக்காக வேதானோ? இல்லையில்லை! உண்மையிலே
உனக்கேதான் நான்யாராம்? ஒருவேளை—ஓர்நண்பன்!
என்றாலும் என்பங்கிற் கெனக்கும்தான் சில உரிமை
இன்றுண்டு. எத்திசையும் தப்பிவிட இயலாத
வட்டமெனத் தான்வளைக்கும் வளையமொத்த காதலிலே
கட்டுண்டால் வழியேது? கருத்தை அழிக்குமொரு
பித்தம் தலைக்கேறிப் பிடித்திட்டால் எப்படியோ
அத்தகைய காதல்இது. காதலுக்கே ஆட்பட்ட
புறவொன்று மற்றையொரு புறவின் அரவணைப்பைப்
பெறுவதற்காய், அப்புறவைப் பிரியமொடு தான்அகவி
அழைப்பதற்காய், மூச்செறியும் அன்புச் சிறகிடையே
இழுத்தணைத்துக் கொள்வதற்காய், பெடைப்புறவின்
இதயத்தின்
ஆழ்ந்த துடிப்பொடுதன் அன்பிதயத் துடிப்பதுவும்
ஆழ்ந்து நேர்முகமாய் அழுந்தும் பரவசத்தின்
இன்பினுக்காய், பெடைதனக்கே எதனையுமே ஈந்துவிடும்!
அன்பின் வலிமையது! ஆனாலும், வேறுபட்ட
நாமறிந்த நட்புறவும், நாமறிந்த மனவுணர்வும்
ஆம்,உலகில் உண்டுண்டு. அவ்வுறவில், அறிந்தவர்கள்
சும்மா சந்தித்து, சுகம்கேட்டு விசாரித்துத்
தம்முள் கைகுலுக்கித் தன்வழியே செல்வதுபோல்,
காதல்மொழி, கைச்சரசம், கடிதங்கள், சந்திப்பு
ஈதெல்லாம் தேவையில்லை. என்கண்கள் எங்கெங்கே

திரும்பிடினும் அங்கெல்லாம் தென்படுவ துன்கண்ணே!
நரம்பொன்று என்னுடம்பின் நார்க்கூட்டம் தம்மிடையே
புதிதாகக் கிளைவிடுத்துப் புடைத்துத் துடிப்பதுபோல்
அதையுணர்வேன்! நிச்சயமாய் அறிவாய்நீ
ஒன்றுமட்டும் ;
பொல்லா வசைமொழிகள், பொய்கள், பழிதூற்றல்
எல்லாம் உனைத்தமக்கே இரையாக்கி விட்டாலும்,
துன்பினிலும் இன்பிலுமுன் துயர்துடைக்க, உன்னருமை
அன்பன், அதே அரவணைக்கும் அருள்பொழியும்
கண்களொடு
காலமெலாம் உறுதியொடு காத்திருப்பான்! இக்கண்கள்
மேலான அன்பொடுனை வரவேற்கும்! களித்தாடும்
பேர்வழியைப் போலல்ல! பெண்ணணங்கே! நீஎனக்குப்
பூரணியாய்த் தோற்றுகின்ற புண்ணியமோ? அல்லல்ல!
தாரணியில் உன்னைப்போல் வேறொருவர் தனைக்காணுக்
காரணத்தால் என்னிரண்டு கண்ணுமுனை வரவேற்கும்!



# 20. ஆசியத்தின் பேரோசை

மீர்ஸோ துர்சுன் ஸாதே

ஆசியத்தின் பேரோசை அகில உலகனைத்தும்
வீசிப் பரந்துயர்ந்து விம்மி ஒலிக்கிறது !
மிடிமைத் துயர்தவிர்ந்த மேதினிக்காய், யாவருக்கும்
அடிமைப் பிணிபோக்கும் அருமருந்தாம் உயிர்மூச்சை
வாரி வழங்குவதாய், வாக்குறுதி கூறுவதாய்
பாருலகில் ஆசியத்தின் பேரொலியும் கேட்கிறது!
ஆசியா விழிக்கிறது ! அருமேனு தயப்பொழுதின்
தேசதனைப் பெருமையுடன் சேர்ந்து களிக்கிறது !
ஆகாயப் பறவையைப்போல் ஆசியத்தின் நல்லிதயம்
வாகான விடுதலையின் வரவினிலே சிலிர்ப்புற்று,
பரவசத்தால் தன்னுள்ளே படபடத்துத் துடிதுடித்துப்
பெருமகிழ்ச்சி யுட்கலந்து பேரின்பம் காண்கிறது !

நம்முடைய பேரணியோ நலியாது ஒழியாது
செம்மாந்து செல்கிறது! சேர்ந்துற்ற நாமெல்லாம்
சிந்தையிலே பயமிழந்து செயலினிலே சோர்விழந்து
பந்தமுற்றுச் சுதந்திரத்தைப் பக்தியொடு போற்றுதற்கும்
முந்துற்றோம்! நட்புறவில் முந்துமொரு திருக்கரத்தைச்
சிந்தைக் களிப்புடனே சேர்த்துப் பிடித்திட்டோம் !
நமைப்பிணைத்த விலங்குகளை நாமுடைத்தோம் !
பல்லாண்டாய்க்
குமைந்திருந்த வாழ்விருளைக் குலைத்தோம் !
கலைத்திட்டோம் !
கற்பனையில் கனவுதனில் காலமெல்லாம் காணாத
அற்புதம்போல் நமைச்சூழ்ந்து அரியதொரு புதியதொரு
வாழ்வும் செழித்தோங்கி வளர்ந்து மலர்கிறது !
சூழ்வினையால் நாடுகளைத் துண்டாடி, தொன்றுதொட்டு

நிலவிவந்த பிணைப்பதனை நிலைகுலைக்கும் புன்மையெலாம்
குலைகிறது! நாடனைத்தும் கூட்டுறவு பூண்டொழுகி
உலகினிலே சாந்திதனை, உயர்வளிக்கும் நல்வாழ்வை
நிலைநிறுத்தும் முயற்சியிலே நெருக்கமுறச் சேர்கிறது!
நாம்விளைத்த நற்பயிரை, நாம்விளைத்த நறுங்கனியை,
நாம்முடித்த சாதனையை, நாமடைந்த போதனையை,
நாம்படைத்த நற்றொழிலை, நமக்குரித்தாய் ஆனவற்றை
நாம்பகிர்ந்து நமதண்டை நாட்டினர்க்கும் நாம்வழங்கி
மாமகிழ்வு கொண்டினிதே வளர்ந்தோங்கி
வாழ்ந்திடுவோம்!



## 21. கவிஞனுக்கு....

மிர்ஸோ துர்சுன் ஸாதே

கவிஞனே! நீநெருப்பாய்க் கனன்றெரிக ! அவ்வாறு
கனல்கின்ற நெருப்பாலே காந்தியொளிர் ஏடுகளில்
கவிதையினை ஏற்றிடுக! கண்டாயா இவ்வுருக்கை?
கனற்பிழம்பிற் புடம்போட்டுக் கரையேறி வந்ததிது!
வருங்காலம் தன்வடிவ வரம்புக்குள் காண்பதெலாம்
வளர்ந்தோங்கும் செந்நிறத்து வண்ணப்
பதாகைகள்தான் !
இரவிக்கும் கவிஞனுக்கும் என்றைக்கும் ஓர் தொழிலே :
இருவருமே படைத்தாக்கி ஈவதுதான் யாதெனிலோ
கதிரொளியும், ஒளிவழங்கும் கதகதப்பும் தாமன்றோ ?
கதகதப்பு குடிபோனல் வீடும்ஒரு கல்லறைதான் !
கதகதக்கும் நல்லன்பைக் காணுது போமிடத்தில்
கதிர்பரப்பும் திருவிளக்கின் சுடர்மட்டும் கண்டிடுமோ?
கதகதப்பை இதயத்தில் காணவில்லை எனில்அதுவும்
கலகலப்பை அறியாத கல்லேதான் ! ஐயமில்லை !
கதகதப்பைப் பாட்டொன்றில் கண்டறியோம் எனிலந்தக்
கவியினிலே அன்பினைநாம் காணுதற்கும் ஏலாது!
கதகதப்பு இல்லையெனில் காவனத்து மலர்க்குலமும்
கவினேடு மலர்வதில்லை! கனன்றெரியும் உத்வேகக்
கதகதப்பு மாண்டுபடின், கழறுகின்ற வாய்மொழியும்
கண்மூடும் ; செத்தொழியும் ! கதகதப்பை இழந்திட்டால்,
குலுங்கச் சிரித்தாலும் குதூகலத்தில் உணர்ச்சி குடி
கொண்டிருக்கக் காண்பதில்லை ! குழந்தையில்லாத்
தொட்டிலினை
அலுங்காமல் ஆட்டிவிடும் கதைபோலே அதுவாகும் !
ஆதலினல் கவிஞனேநீ ! ஆர்வமொடு கனன்றெரிக !
நீயே நெருப்பாகி நின்றெரிந்தால் வருங்காலம்
நின்விருப்பம் போலாங்கே நிச்சயமாய் உருவாகும் !
காய்ந்திட்ட நல்லுருக்கு, காதல், கவிதையெலாம்
காரியத்தில் ஓரியல்பே கொண்டிருக்கக் கண்டிடுவாய் !

ஆயிடினும், சுதந்திரத்தின் அணையாப் பெருஞ்சோதி
அதற்கேற்ப வளர்வதுவும் அவசியம்தான் என்றறிவாய் !
கவிஞனே ! நின்னிதயம் காளவாய்த் தீப்போன்று
கனற்பிழம்பின் ஒளிசிதறிக் கனலட்டும் ! கனன்றக்கால்,
புவிமனிதர் இதயமெலாம் புத்துணர்வும் புத்தொளியும்
பொலிந்தாங்கே விழித்தெழுந்து புதுமைபல தானியற்றும்!
தீக்கதிரைப் போலுனது திருவாக்கு பிறக்கட்டும் !
திருவாக்கில் தீப்பொறிகள் தெறித்தாங்கே சிதறட்டும்!
வாக்கினிலே கற்களெலாம் உயிர்பெற்று வாழட்டும் !
வாழ்வுற்ற கல்லெல்லாம் வாய்திறந்து கத்தட்டும் !
கவிஞனே ! உனக்குற்ற காலமதோ மிகக்குறைவு ;
காலத்தில் உன்பங்கு கரைந்து மறைவதற்குள்
அவித்தீயாய்க் கனன்றெரிக! ஏனென்றால்
அனல்பிறக்கும்
ஆசையின்றி இவ்வுலகில் அன்பெதுவும் வாழ்வதில்லை !



# 22. எனக்கோ பழம்நாட்கள் எல்லாம் மறந்தவைதான் !

யாரோசாவ் ஸ்மேல்யாகோவ்

எனக்கோ பழம்நாட்கள் எல்லாம் மறந்தவைதான் !
உனக்கோ ஓடிவிட்ட ஆண்டுகளில் ஒன்றேனும்,
என்காதல் நித்தநித்தம் ஏற்றிவைத்த சுமையதனை,
என்னுளத்தி னுற்றதுயர் ஈந்துவந்த பாரத்தைச்
சிறிதும் குறைத்ததில்லை. அந்நாளில் சித்திரப்பூச்
சரிகையிட்ட செவ்வாடை தரித்தவளாய், ஆங்கேநீ
கருவம் நிமிர்ந்தோங்கும் கட்டழகுக் கொடிபோன்ற
உருவத்தோ டென்னெதிரே உல்லாசமாய் நடந்தாய் !
அந்நேரம் உன்வருகை அகன்வான மண்டலத்தை
மின்னல் கிழிப்பதுபோல், வெட்டியதோர் மின்னொளியும்
காலமழைத் தாரைகளுக் கப்பாலே பளபளத்தாற்
போலிருக்கக் கண்டேன் நான்! அத்தகைய பொழுதில் நீ
உன்னுடைய கொடியிடையில் ஒருகையை மெலத்தாங்கி,
தன்னிலையில் தாழாத தலைநிமிர்ந்து நடந்திட்டாய் !
அவ்வளவில் நானுன்னைக் கண்டறிந்த அதிசயம்தான்
எவ்வளவு புதியதடி ! எவ்வளவு புனிதமடி !
ஆயிடினும் நானோ அவமானப் பட்டுவிட்டேன் !
போயொழிந்த ஆண்டுகளில் உன்னருகே போந்திருந்தும்
சிந்தைச் சிறுபயத்தால், சில்லறைக் கவலைகளால்
மந்தமுற்றுப் போனஎன்றன் மனமோ, வெகுதொலைவில்
போயிருக்க நேர்ந்ததம்மா! அத்தகைய பொழுதினிலே
நீயிருந்த நிலைகாணும் நினைப்பிழந்து போய்விட்டேன் !
என்னருகில் இன்றில்லா என்னழகே ! என்னன்பே!
சன்னக் குரலெடுத்துச் சத்தமிட்டுக் கூவுகின்ற
சின்னச் சேவலென ஏதேதோ செப்புகின்ற
என்னை, நான்விரும்பி இழைக்காத இப்பிழையை,
முன்னனு மதியின்றி மொழிகின்ற இப்பாட்டை
மன்னித் தருள்கவென மன்றுடிக் கேட்கின்றேன் !

ஆர்க்டிக் பிரதேசத்தில் வெண்கடலுக்கு வடக்கே அமைந்துள்ளது கோலா தீப கற்பம். பனி அதிகமான இந்தப் பிரதேசம் புரட்சிக்கு முன்னால் வெறும் பாழ் நிலமாகத்தான் இருந்தது. அங்கு எண்ணாயிரம் மக்கள்கூட வாழவில்லை; வாழ்ந்து வந்தவர்களிலும் பெரும்பாலோர் ஜார் அரசாங்கத்தால் நாடுகடத்தப்பட்டு, பனிப் பிரதேசத்தில் பரதேச வாழ்வு வாழ்ந்தவர்கள் தான். புரட்சிக்குப்பின்னர், இதே தீபகற்பத்தில் பல்வேறு கனிப்பொருள்கள் கண்டறியப்பட்டு, அதன் விளைவாகப் பல தொழிற்சாலைகளும், கனிச்சுரங்கங்களும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. புதிய நிர்மாணத் திட்டங்கள் அங்கு நிறை வேற்றப்படுகின்றன. இந்தப் பிரதேசத்தில் இளம் பத்திரிகை நிருபராகப் பணியாற்றுகிறார் ஓலெக் த்மித்ரியேவ். அத்துடன் அவர் சிறந்த இளங்கவிஞராகவும் திகழ்கிறார்.

# 23. முதியவர்கள்

ஓலெக் திமித்ரியேவ்

நாளுக்கு நாளாக நானும் பெரியவனாய்
ஆளாகி, விறைப்புற்றும் முறைப்புற்றும்
அமைகின்றேன்......

வாகாய் முன்வளைந்த தோள்கொண்ட வயோதிகரும்
*கோகோல் சாலையிலே குறுகுறுக்கும் புறுக்களுக்குத்
தீனியினைப் போடுகின்றார். திறந்திருக்கும் அவர்கரத்தின்
தானியத்தைக் கொத்தவரும் புறுக்களுமே தம் சிறகால்
முதியவரின் மார்பருகே மோதுவதும், குறுகுறுத்துக்
குதிப்பதுமாய்த் தானிருக்க, குறியேதும் வேறின்றி
முதியரவர் புறுக்களையே முனைப்பாகப் பார்த்தவராய்
இதயம் இழந்திருந்தார். எம்மருமைத் தாயர்களும்
தந்தையரும் இளையவராய்த் தானிருந்த காலத்தே

* கோகோல் (நிக்கோலாய் கோகோல்-1809-1852) ருஷ்யக் கவிஞர்; சிறந்த அங்கதக் கவி).

தந்தமது முகங்களிலே தடம்வகுத்துப் பதிந்து, தமை
நொந்துபடச் செய்தபல நொம்பலமும் கண்டிருந்தார்.
கொந்தும் அடியுதையும், குடிபெயர்ந்து பிரஷ்டரெனச்
செல்லும் கொடுமைகளும் திரைமறைவில் காத்திருக்க,
துயிலிழந்தும், பசியுழன்றும், துன்பங்கள் பட்டவராய்
அயிர்த்திருந்தார்! நூற்றுண்டின் அவதிபல
சுமந்தலுத்துக்

களைத்திருந்த வேளையிலும், கண்முன்னே ஒருமரம்தான்
தழைத்துவரக் கண்டக்கால், வசந்தத்தின் தண்மலர்கள்
பூத்தொளிர்ந்தால், புல்லிதழும் புன்னகைத்தால்,
சூரியனும்

தீத்தவழ உதித்தக்கால், நீவிரெலாம் திருமுகத்தில்
குதூகலமே பொங்கிவரக் குறுநகையே புரிகின்றீர்!
முதியவரே! அன்பான மூத்தவரே! குளிரிலந்தைப்
பழச்செடியின் அருகேநீர் பணிந்தே குனிகின்றீர்!
முளைத்தெழுந்த நாணலினை முறித்ததனில் குழல்செய்தீர்!
இளந்தவளைக் குஞ்சொன்றை எடுத்தேகி, அக்குஞ்சைக்
குளத்தினிலே மீளவிட்டுக் குதூகலமே கொள்கின்றீர்!...
புடம்போடும் காலமெனும் சோதனையில் பொன்ருது
இடம்பெற்ற கருத்துகளை, இரும்பொத்த பெருந்துணிவை
உம்மிடத் தேயிருந்து உரிமையென யாம்பெற்றுச்
செம்மாந்தோம்! என்ருலும் எல்லாம் தெரிந்தவர்போல்
இளநகையே யாம்புரிந்து "இரண்டாம் முறை வருமோர்
குழந்தைப் பருவம்" என உமைநோக்கிக்
கூறுகின்றேம்!...

இப்போதோ, முதுமையினை எய்திவிட்ட இவரெல்லாம்
தப்பாதே வாழ்க்கையெனும் தணலுலையில் புடம்போட்டு
உருக்காகி, பொற்கால வாழ்க்கைக்கும் உரித்தாகி
இருக்கின்ற உண்மையினை, எங்களது நல்லுலகில்
பொற்காலம் வந்துதித்த புதுமையினை, ஓர்நொடியில்
அற்புதம்போல் நினைவூட்டி அறிவுறுத்தக்
காண்கின்றேம்!

# 24. ....ஊகியுங்கள்!

ஒல்ழாஸ் சுலெய்மெனேவ்
*(காஜக்ஸ்தான் கவிஞர்)*

வானேக்கி மேலேற மானிடர்கள் விரும்புவதேன்?
வான்பருந்து பறவைகளை வாழ்த்துவதேன்? வையகத்தில்
மானிடர்கள் படைத்தளிக்கும் அழகதனை 'மகோந்நதமாய்'
'வான் உயர்ந்த' என்றுபல வார்த்தைகளால்
வழங்குவதேன்?...
ஆறுபல வழிந்தோடும்; அணிவயலுக் கமுதூட்டும்;
ஆற்றங் கரையருகே அழகுநகர் பலதோன்றும்;
நீரோடும் ஆறுகளின் நீல ரத்த நாளங்கள்
நெருங்கிச் சூழ்ந்திருக்க, நிலமகளின் பேரிதயம்
பறந்து சிறந்தோங்கும்! நேற்றைப் பழம்நாளின்
பனிபடிந்த தாரகைகள் மண்டலத்துப் பாதையினை
அறிந்துகொளல் சிரமம்தான். ஆனாலும் உன்னுடைய
அரும்இதயம் தனைவாட்டும் அகிலத்தின் பாதையினைக்
கண்டறிதல் மிகப்பெரிய கஷ்டம்தான். ஆற்றினைப்போல்
காலமெல்லாம் அப்பாதை காடுமலை பலகடந்தும்,
உண்டான பல்நகரைஒன்றேடொன் றிணைசேர்த்தும்,
ஊடறுத்துப் பாய்கின்ற ஒளிக்கதிர்போல் இருளதனை
ஓடவிட்டும் பழங்கால உலகையெலாம் உன்னருகே
ஒருநொடியில் கொண்டுதரும்! உன்னிதயப் பாதையதே
நீடுயர்ந்த தாரகையை நின்னருகே கொண்டுவரும்!
நிகழ்ச்சியிது சிரமம்தான்! என்றாலும் நீயந்த
வழியதனைக் கண்டறிந்தே வரவேண்டும்! ஏனென்றால்
வையகத்தைச் சாருமந்த வழியேதான் வானுலகின்
ஒளிமலிந்த இந்நாளின் உடுக்குலத்தை எய்திடுமோர்
உன்னதமாம் பாதைக்கும் உற்றவழி காட்டிடுமாம்!

# 25. ஓடும் ரயிலில் உல்லாச கீதம்

ஆந்திரே வோஸ்னெஸன்ஸ்கி

ஆடிச் செல்லும் ரயில் வண்டி !—அதில்
*அக்கார்டி யன்கள் ஒரு நான்கு
கூடிக் கலந்து இசைபொழியும் !—மழை
கொட்டும் வெளியே ஜன்னலிலே !
மழையொரு பக்கம் பெய்தாலும்—அந்த
வாத்திய கீதம் ஓயவில்லை !
இளைஞர் நால்வர், மாணவர்கள் ;—அவர்
இன்னிசை கீதம் இசைத்தார்கள் !
படிப்புக் காலம் முடிந்தாச்சு !—இனிப்
பலப்பல ஊரும் சுற்றிவர
விடுமுறை நாளும் வந்தாச்சு !—அதை
விமரிசை யாக்க முனைந்தாச்சு !

ஆகா ! அடடா ! எதிர்ப்புறத்தில்—அந்த
ஆசனந் தன்னில் இருப்பவளார் ?
வாகாய் அமைந்த வடிவழகி!—அந்த
வாலைக்குமரி யார், அவள் யார் ?
ஓடும் ஓடும், ரயிலோடும் !—அதில்
உல்லாசம் துள்ளிக் குதிபோடும் !
பாடும் பாடும், இசை பாடும் !—அங்கு
பரவச வெள்ளம் துள்ளாடும் !
வாராய் பெண்ணே ! வடிவழகி !—இந்த
வாத்தியக் காரர் நால்வரில் நீ
ஆராக் காதல் கொள்பவன் யார் ?—அந்த
அதிட்டம் பெற்றவன் எங்களில் யார் ?

* அக்கார்டியன் : ஆர்மோனியம் போன்றதொரு துருத்தி வாத்தியம்.

# 26. பழைய எழுத்துப் பிரதி

ராசுல் ராஜா
(அஜெர்பெய்ஜான் கவிஞர்)

பின்னிப் பிணைந்துநடம் புரிகின்ற பின்னல்வலை
என்ன அமைந்திருக்கும் எழுத்தின் பலவரிகள்;
காலத்துக் காற்சுவட்டின் கறைபட்டுச் சீர்குலைந்த
மூலை விளிம்பிஞெடு மென்மையிலும் மென்மையதாய்
மக்கி நிறம்மாறி வருகின்ற மஞ்சட்தாள்
பக்கங்கள் மீதினிலே பலப்பலவாம் எழுத்துக்கள்
மூச்சுவிட்டால் பொடிப்பொடியாய் முறிந்துவிடும்
என்றெவரும்
மூச்சடக்க வைக்கின்ற மொறுமொறுத்த பழந்தாள்கள்!
ஆனாலும் கல்லையுமே மிஞ்சுகின்ற அதிவலிமை
தானமைந்த தாள்களவை; முடிவதனைத் தானறியாப்
பற்பலவாய் ஆண்டுகளின் பாதையிலே அவைபெற்ற
அற்புதமாம் நம்பிக்கை, ஆனந்தம் வேதனைகள்
எல்லாமும் அவற்றினிலே ஏறிச் சுமந்திருக்கும்!
பொல்லாத மாமாயம் புரிகின்ற பக்கங்காள்!
நீங்கள் சிரிக்கவைப்பீர்! நெக்குருகி அழவைப்பீர்!
நீங்கிவிட்ட காலமது நெட்டுயிர்க்கும் குரலதனை
உங்கள் குரலதனில் உன்னிப்பாய்க் கேட்கின்றேன்.
உங்கள் குரலதுவோ, ஒருநாளும் அழியாத,
மானிடனின் என்றென்றும் மறையாத மனவேகம்
தானதனை எடுத்தெனக்குத் தவறுது வழங்கிடுமே!



ருஷ்ய நாட்டில் கிழக்கு சைபீரியப் பகுதியில் யாக்குட் சோவியத் சோஷியலிஸ்ட் குடியரசு உள்ளது. புரட்சிக்கு முன்னர் இந்தப் பகுதி மக்கள் எழுத்து வாசனையே அறியாதவர்கள். அவர்கள் பேசிய மொழிக்கு வரிவடிவம் கூட அப்போதில்லை. அந்தக் குடியரசில் உள்ள ஒரு சிறு தேசிய இனம் எவங்க் இனமாகும். இந்தத் தேசிய இனத்தின் மொழியைப்பேசும் மக்கள் இப்போது எழுத்தறிவைப் பெற்றதோடு மட்டுமல்லாமல் இலக்கியமும் படைக்குமளவுக்கு வளர்ந்து விட்டார்கள். அதற்கு இந்தச் சிறந்த கவிதையே நல்ல எடுத்துக் காட்டு.

## 27. என் நாடு

அலிதேத் நெம்துஷ்கின்
(எவங்க் கவிஞர்)

என்னருமை மக்களர்தம் இன்மொழியை, கண்களில்நீர்
எழும்பிவரச் செய்யுமவர் இனியபல பாடல்களை
என்றேனும் நான்மறந்தால், என் உதடும், என்செவியும்
என்கண்ணும் இருப்பதற்கே ஏதுபயன்? ஏதுபயன்?...

என்னருமைத் திருநாட்டின் இன்மணத்தை
நான்மறந்தால்
என்னுட்டின் ஆணைகளை யானே புறக்கணித்தால்
பின்னரென்றன் வாழ்க்கையிலே பெறும்பயனும்
யாதுகொலோ?
பின்னரென்றன் வேலையற்ற கைகளுமே
பயன்பெறுமோ?...

என்னிருகால் அடியினிலே பனித்துளிகள் மலர்ந்திருக்க,
எங்கிருந்தோ சோகமயத் தாலாட்டை இளங்காற்றும்
இன்னிசைக்க, பைன்மரத்தின் எட்டாத சிகரமெலாம்
எல்லையற்ற நிர்மலவான் மண்டலத்தை எட்டிவிட...

என்னருமைத் தாய்நாட்டை என்னுளத்தே நான்போற்றி
எந்நாளும் நேசித்தால், என்னிதயம் தன்னிலதை
என்றென்றும் உயிர்வாழ்ந்து இருந்துவர யான்செய்தால்,
பின்னரென்றன் நாட்டினர்தம் பேரிதயம்
அனைத்தையுமே

பிடித்துலுக்கி, அன்னவரை என்றென்றும்
பிணைத்தணைத்துத்
தன்னடிமை யாக்காவோ என்னருமைப் பாடலெலாம்?



க்யூபா நாட்டுக்குச் சென்று வந்த கவிஞர் அந் நாட்டில் தாம் கண்ட ஒரு வீராங்கனையைப் பற்றிப் பாடிய பாடல் இது.

## 28. எழிலரசி

யெவ்ஜேனி யெவ்துஷேங்கோ

வீதியெலாம் பெருங்கூட்டம்; வீடுகளில் யாருமில்லை;
வெறிகொண்ட களியாட்டு விளையாடும் காட்சியது.
ஏதெனிலோ சாந்தியாகோ எழிலரசி இவளென்று
இன்றிரவில் அவரெல்லாம் தேர்ந்தெடுக்க இருந்தார்கள்.
ஜாலர்வலைப் பின்னல்பல தானுடும் பட்டுடைகள்
தரித்தஇளம் நங்கையர்கள் சங்கீதத்துக் கேற்றபடி
வாலைப்பே ரெழிலரசி மணிமுடிக்குப் போட்டியிட்டு
நகரத்து வீதியிலே நடனமிட்டுச் சுழன்றுடி

நடைபோட்டுப் படைபோலே வருமழகை
நான்கண்டேன்.

தந்தநிறம், தங்கநிறம், தளிர்நிறமும் கலந்தழகு
கொழிக்கின்ற அங்கங்கள்! கோலவெழில் வதனங்கள்!
குமரியர்கள் இவர்களிலே ராணியெனக் கொளப்பெறுமோர்
எழிலரசி அவள்யாரோ? இருண்ட்வெழிற் கூந்தலோடு
இருள்நிறத்து *வீனஸென இருப்பவளோ? இல்லையெனில்,
குறுகுறுத்துச் சிமிட்டுகின்ற இளநீர்க் குறுவிழிகள்
கொண்டிருக்கும் குறும்புமிகு குட்டிப்பெண் அவள்
தானோ!...

வருமவரில் ஒவ்வொருத்தி வடிவழகும் என்னுளத்தை
மயக்கிடினும் எழிலரசி என்றேநான் மதிப்பவளோ,
இன்னொருத்தி யேயாவாள்! இந்தவொரு அணிவகுப்பில்
எவளழகும் அவளழகிற் கீடில்லை! மலர்க்குலமும்

---

* வீனஸ்: ரோமானிய அழகுத் தேவதை.

பின்னல்மிகு பட்டுடையும் அவளெழிலைப் பெருக்கவில்லை!
பிரத்யேக மானதொரு பெருமையவள் கொண்டிருந்தாள்.
என்னவெனில் அவள் இடையில் இருக்குமொரு
பிஸ்தோலே,

எழில்பெருக்கும் சாதனமாய் அவளிடத்தில்
இருந்ததுகாண்!

எண்ணம், மனவுறுதி, இசைந்தவொரு பேரமைதி
எல்லாம் நிறைந்தவளாய், இருகண்ணும் கூரியதாய்,
பெண்ணவளும் கழுகெனவே பெருமிதத்தோ
டங்குவந்தாள்.

பெண்ணவளே புரட்சிப்பெண்! க்யூபாவின் பேரழகுப்
பெற்றிமிகும் எழிலரசிப் பெண்மகளும் அவளேதான்!



## 29. வசந்தம் வருகிறது!

கார்லோ கலாத்ஸே

வந்திடும் வசந்தத் திருநாள்!—மலைவீழ்
வாரியைப் போலொரு பெருநாள்!
எந்தன் தந்தை இன்புற வாழும்
இல்லத் தகன்ற முன்றிலில் இருந்தே
விந்தை வானின் நீலவி தான
விண்ணகம் தழுவி விம்மிதம் பெறுவேன்!

வந்திடும் வசந்தத் திருநாள்!—மலைவீழ்
வாரியைப் போலொரு பெருநாள்!
பளிச்சென யாவும் பறித்திடும் கண்ணே!
பரிதிக் கதிரோ டாடிடும் காற்று!
ஒளியும் நிழலும் ஓடிப் பிடிக்கும்
உயர்மலை மேலே உன்னத நடனம்!

குன்றுகள் விழிக்க, குளிர்புன லதனில்
குளித்திடும் மார்பெனக் குவடுகள் விம்மி
நின்றிடும் அந்த நேரம் மக்கள்
நித்திரை இன்னும் நீங்கா திருப்பார்!

வந்திடும் வசந்தத் திருநாள்!—மலைவீழ்
வாரியைப் போலொரு பெருநாள்!

மலையெனும் கோட்டையில் மவுனம் கலையும்!
மஞ்செனும் பனித்திரை மலைகளின் மேலே
கலைவுரு வண்ணம் தொங்கிடும் காட்சி!
காண மகிழ்தரும் காலையின் மாட்சி!

புதுமைசேர் ஏரால் முதியவோர் உழவன்
பூமியை உழுதிடும் போதினில், ஆங்கே
பதிந்திடும் ஏர்த்தடப் பாதைகள் தம்மைப்
பார்த்தால் எனக்கே பரவசம் என்னே!

ஓடைகள் பாயும் ஓரிடம் தன்னில்
ஒதுங்கியே நிற்கும் ஒருசிறு மாடு
கூடும் கறுப்பும் ஈரமும் குடிகொள்
குறுவிழி யுருட்டிக் குறித்தெனை நோக்கும்!

இத்தகைப் பொழுதில் எழில்பல வெல்லாம்
இமைகளும் நீள, இருவிழி யகன்று
புத்தொளி துள்ளப் புரிந்திடச் செய்யும்
புதுமையை வியக்க எவர்க்கும் புரியும்!

ஆயினும் செருப்பும் அணிந்திடா மேய்ப்பன்
அதிசயம், கேள்வி அனைத்துமே இல்லான்!
வாயிலா தாங்கே வணங்கியே நிற்கும்
மாட்டினைத் தழுவி எய்துவன் மகிழ்ச்சி!

எங்கணும் அமைதி! இன்கனித் தோட்டம்,
இல்லம், கடற்கரை, அலைகள் எங்கும்
தங்கிடும் சாந்தி! இதயம் தனிலும்
தனிப்பெரும் அமைதி ததும்பிடும் பொங்கி!

அங்குள தொலைமலை யதனிலே காற்றின்
அசைவும் மெதுவாய் அடங்கும், மடியும்!
வந்திடும் வசந்தத் திருநாள்!-மலைவீழ்
வாரியைப் போலொரு பெருநாள்!



# 30. வசந்தத்தின் காலை

போரிஸ் குலிகோவ்

விடியாப்பொழுதின் ஒலிகள்பலவும்
விளங்காவிதத்தில் இருக்கும்!
விண்ணகத்தெளிவில் நட்சத்திரங்கள்
இன்னும்வெட்டி மினுக்கும்!
விடியற் பொழுதே வாவாவென்று
வேகக்குரலில் உவகை
விம்மிப்பெருகிப் பெருங்களிதுள்ள
வீட்டுக்கோழி கூவும்!

காலைப்பொழுதும் வந்தது மக்காள்!
கண்விழித்தெழுவீர்! இன்று
காத்தேஇருக்கும் கடமைகள் தம்மைக்
கடிதேசெய்ய முனைவீர்!
மாலையை, இரவைக் காட்டிலும் சமர்த்தும்,
மதியின் நுட்பம் தானும்
மலியக்காண்பது காலைப்பொழுதே
மக்காள்! என்றே பகர்வார்!

விழித்தேஎழுவீர் மக்காள்! விடியல்
புலரக்காண்பீர்! விண்ணில்
வீசும்செக்கர்க் கதிர்கள் பரந்து
விரியக்காண்பீர்! இரவு
கழித்தே விழித்த உம்மிடம்காணும்
கவினுர்எழிலைக் காட்டிக்
காலைப்புதுமை நாளும் துயிலைக்
களைந்தே வருதல் காணீர்!

பனித்துளிதன்னில் குளித்தெழும்பூமிப்
பரப்பினில்புத்தொளி காணும்
பாடுபடுவார் உழைப்பால்புனிதப்
பவித்திரம் எய்தித் தோணும்!
குனித்திடும் அரிவாள் பனித்துளிபடிந்த
புல்லின்குலத்தை அறுக்கும்;
கூண்டுக்கரும்புகை திரிதிரியாகக்
குழைந்துவளைந்து திரிக்கும்!

இயக்கிடும்வேகம் தன்னால்ஆலை
எந்திரம் கடகடத் தோடும்!
இறங்கியகூரைச் சரிவிலிருந்து
குருவியின் இனங்கள் தாவும்!
மயக்கிடும்காலைப் பொழுதிலெடுத்த
வேலைகள் வெற்றியை மருவும்!
மனக்களிப்பாலே நயம்படுசந்தம்
கவிக்கும்மலிந்து பொழியும்!



# 31. வசந்த காலக் காலைப் பொழுது

பெட்ரூஸ் புரோவ்கா

"விழித்தெழுங்கள்! செயல்படுங்கள்!" எனவிளிக்கும்
வசந்தம்

வேலைதனை யாவருக்கும் கண்டறிந்து வழங்கும்!
களித்தெழுந்து கூடுகளைக் கட்டிமுடித் திட்ட
காக்கையெலாம் ஒன்றாகக் கும்பலிட்டுக் காணும்!

அருகிலுள்ள கிளைகளிலே அவையெல்லாம் அமர்ந்து
அலட்சியமாய் நம்மையெல்லாம் விழிவெறித்து நோக்கும்!
கரையுமதன் இளங்குரலும் காலைநேரத் தின்பக்
கனவினிலே இருந்து நமைக் கண்விழிக்கச் செய்யும்!

வெகுநேரம் கழித்திரவில் நாம் தூங்கி னாலும்
விடியலில்நம் மனவுணர்வு விழித்தெழுந்து நம்மை,
"வெகுநேரம் ஆயிற்றே! வீடுகளாம் கூட்டை
விட்டிறங்கி வேலைசெய விரைந்திடுவீர்!" என்னும்!



# 32. வசந்த காலப் புயல்

எப். தியூத்சேவ்

விளையாடும் பெருங்களிப்பில் சிரித்துநகை யாடி,
விண்ணீல வானரங்கில் பம்மியுருண் டோடி,
இளவசந்த பருவத்தில், முதன்முதலாய்க் கன்னி
இடியோசை கணகணத்து முழக்கமிடும் போது,
வளமிகுந்த மேமாதத் தொடக்கத்தில், புயலின்
வரவுணர்ந்து நானதனை விரும்பிமனம் மகிழ்வேன்!

குலவையிடும் சிற்றொலிகள் கலகலவென் றுருளும்;
கொட்டுமழைத் தாரையெலாம் பளபளத்துப் பொழியும்;
நிலம்படிந்த தூசியெலாம் பறந்தெழும்பிப் படரும்;
நித்திலம்போல் மழைத்துளிகள் கொத்துக்கொத்தாய்த்
தொங்கும்;
புலங்களிலே படிந்திருக்கும் நீர்ப்படிவ மெல்லாம்
பொன்னொளியாய்த் தகதகத்து மின்னிவிளை யாடும்!
பொழில்களிலே புள்ளினங்கள் கலகலத்துப் பாடும்;
பொற்றைகளில் சிற்றோடை விரைந்திறங்கி யோடும்;

சளசளக்கும் ஒலியெழுப்பும் காவனத்துச் செறிவும்,
சப்தமின்றி முணுமுணுக்கும் குன்றுகளின் சரிவும்,
முழக்கமிட்டுக் கணகணக்கும் முதலிடியின் ஒலியை
முன்னியெழும் மகிழ்வுடனே எதிரொலித்துக் களிக்கும்!

# 33. படிகத் தெளிவொளிரும் பகற் பொழுது....

எப். தியூத்சேவ்

இலையுதிரும் காலத்தின் இளம்பருவச் சூழலிலே
எழில் பொங்கும்! நேரமெலாம் இனிமையுடன்
விரைந்தேகும்!
மலைப் படிகத் தெளிவொளிரும் பகற் பொழுது
மலிந்திருக்கும்!
மஞ்சள்வெயில் அமைதியொடு மகத்துவமாய்
வழிந்திறங்கும்!

கருக்கரிவாள் தானியத்தை அரிந்தெடுத்துக்
களைந்துவிட்ட
கழனியெலாம் திகம்பரமாய், சூனியமாய்க் காட்சி தரும்!
வெறிச்சிட்டு வெட்டவெளி வெம்பரப்பாய்ப் பரந்திருக்கும்
விளைநிலத்துக் கதிர்த்தாளில் சிலந்திவலை விரித்திருக்கும்!

வயல்களெலாம் வெறுமையுற, வான்பறவைக் கீதவொலி
வாயடைத்துப் போயிருக்க, வரவிருக்கும் மழைப்பருவப்
புயல்களெலாம் மூச்சடங்கிப் புதைந்திருக்க,
பொழுதடையும்
புனிதமிகும் மாலையொளி வயற்புறத்தில் பொழிந்திறங்கும்!



# 34. வசந்தத்தில் ஒரு நாள்

ராமிஸ் ரைஸ்குலோவ்
(கிர்கீஜியக் கவிஞர்)

வாய்த்த பதினெட்டு வயதெனில் உன்னரும்
வாழ்வினில் எதிர்ப்படும் வழிகள்தான் எத்தனை!
வாய்க்கும் வசந்தமும் இப்போது வந்தது!
வான்கதிர் நல்லொளி வழங்குது! புதியவாய்
இளம்பசும் புல்லினம் எங்ஙணும் முளைக்குது!
இன்ப வசந்தத்தின் இதயச் சிலிர்ப்புனை
வளைத்துப் பிடிக்குது! வசந்தமும் நின்முனே
வழங்கிடும் எண்ணிலா வண்ணத் தொகுதியைக்
கண்டதும் உன்தலை கறங்கிக் கிறங்குது!
கண்முனே பற்பல நம்பிக்கைக் காட்சிகள்
மண்டியே சேனைபோல் மல்கி நடக்குது!
வசந்த பருவத்தின் நிரந்தர மாருதம்
திரையெழுந் தாடிடும் செந்நிறப் பதாகையைத்
தீக்கொழுந் தென்னவே ஆக்கிச் சிறக்குது!
தரையிலோர் சிறுவனும் தனியனாய்ப் புல்வெளி
தன்னிலோர் ஆட்டிளம் குட்டிபோல் தாவியே
களித்தாடு கின்றனன்! களித்திடும் சிறுவர்தம்
கைகளில் உள்ளபல் பலூன்களும் காற்றினை
இழுத்துண்டும், உலகத்தின் எல்லாக் காற்றையும்
இரைகொள மாட்டாது சிரித்து வெடித்தன!



# 35. வான்வெளி வீரர் வரும் வழியில்

யேவ்ஜேனி யேவ்துஷேங்கோ

நான்வசிக்கும் லெனின்தெருவில் நாள்மலரும் காலையிலே
வான்தனுசைப் போல்நீரை வாரியங்கு தெளித்திடுவார்.
தினந்தினமும் காலையில்நான் வானொலியைத்
திருப்புகையில்
மனம்வியக்கும் பற்பலவாம் விந்தைகளை எதிர்பார்ப்பேன்.
வீதிபல இருந்தாலும் விண்வெளியில் வலந்திரிந்து
மேதினிக்கு மீண்டுவரும் வீரரெலாம் வருகைதரும்
பாதையிது! லெனின்பெயரால் பரந்திருக்கும்பெரும்பாதை
ஈதென்னும் உண்மையினை எல்லோரும் அறிந்திடுவார்!
விண்மீன்கள் வீழ்மீன்கள் மத்தியிலே விண்ணகத்தில்
கண்மயக்கும் வேகத்தில் கறங்கிச் சுழன்றுவரும்
நாளையிலே விண்வீரர் நந்தலைவர் லெனினுடனே
ஆளுக்கோர் முறையினிலே அளவளவிப் பேசிடுவார்!
வாய்திறந்து அவருரைத்த வார்த்தையெதும் இல்லாமற்
போயிடினும் அன்னவர்தம் பேச்செல்லாம் நான்புரிவேன்!
உத்தமராம் லெனினும்அவர் உயரப் பறக்கையிலே
வைத்தகண்ணை வாங்காமல் வாஞ்சையுடன்
பார்த்திருப்பார்!

தாரகைசூழ் வான்வெளிக்கும் தாரணிக்கும் நல்லுறவுச்
சீருரைத்த மாமேதை சிந்தையிலே அவ்வுறவு
இசைந்திருக்கும் அற்புதத்தை எல்லோரும் நன்கறிவோம்!
திசைதிரிந்து விண்ணிறங்கித் திரும்பிவரும் விண்வீரர்
தங்களது அருந்தலைவர், தாதை, உயிர் நண்பரென
மங்காப் புகழ்படைத்த மாமேதை லெனினவர்தம்
சமாதியின்முன் சென்றுங்கே தாள்பணிந்து, சென்றுவந்த
சமாச்சாரம் அத்தனையும் சாற்றிடுவார்! "விண்பயணம்
முற்றியது! இட்டபணி முடித்திட்டோம்!" எனத்தமது
வெற்றியினை எடுத்துரைப்பார்! மாமேதை லெனினவரும்
செவிசாய்த்து அவர்கூறும் செய்தியெலாம் கேட்டுவந்து
"சபாஷ்மகனே!" என்றுங்கே சாற்றிடுவார்! ஆமாமாம்.
இருவிழியும் திறவாமல் இருந்தாலும் இதழ்க்கடையில்
திருவிளங்கும் இளமுறுவல் புரிந்ததனைச் செப்பிடுவார்!

# 36. அண்டவெளிப் பயண அற்புதம்!

ஓஸிப் கோலிச்சேவ்

**வி**ண்மீன்கள் பிரமிக்க அண்டவெளிக் கப்பல்
கண்ணிமைக்கும் நேரத்தில் ககனவெளி ஏகும்!
மதிக்கவொணுப் பயணமதில் ருஷியமகன் ஒருவன்
கதித்தெழும்பித் தொலைதூரக் ககனவெளி எய்தி,
வாஞெலியில் செய்திகளை வழங்குவதை, ருஷ்யா
பேணுமொரு தாயுளத்தின் பெருமையுடன் கேட்கும்!
நெடுவானில் எதிரொலித்து நிரந்தரத்தை எய்தல்
அடடாவோ! ருஷியமொழி வார்த்தைகளே அன்ருே?
விசும்பிடையே இத்தினத்தில் விம்மியொலிக் கின்ற
பசும்மொழியும் நம்ருஷ்ய பாஷையது வன்ருே?
லெனிஞேடு *புஷ்கினெலாம் நேசித்துக் காத்த
இனியமொழி, நாமெல்லாம் இதயத்துள் போற்றும்
அருமைமொழி, ருஷ்யமொழி! அம்மொழியே விண்ணில்
பெருமையொடும் உவகையொடும் பேசுகின்ற தன்ருே?
அண்டவெளி மனிதனவன் அருமைமணிக் குரலும்
விண்தொலைவைத் தாண்டிவந்து தெளிவுடனே விம்மும்!
'நான்சுகமாய் இருக்கின்றேன், நாட்டினரே!' என்னும்
தேன்சுவையை நம்முடைய செவிகளிலே தேக்கும்!
முன்னுளில் நெஞ்சகத்தே மூண்டகன வெல்லாம்
இந்நாளில் நனவாக எய்திடுமோர் உண்மைச்
செய்தியினைக் கேட்பவர்தம் செவிபாய்ச்சி, வெற்றி
எய்தியதை அக்குரலும் எடுத்துநமக் குரைக்கும்!
இழுக்கின்ற பூப்பரப்பின் ஈர்ப்புவலி தன்னை
விழுத்தாட்டி நாமின்று வெற்றிவிழாக் கண்டோம்!
ஆம்! அருமை நண்பர்களே! அறப்பெருமை கொண்டு
நாம்மகிழும் பேருரிமை நம்மவர்க்கே உண்டு!
ஏனெனிலோ, உடுக்கணம்சேர் விண்ணரங்கில் ஏறி
வானவெளி தனிலுலகை வலந்திரிந்து மீண்டு
வந்தவனும் சோவியத்தாம் வளம்நாடு பெற்ற
மைந்தனவன் என்பதனுல் மாமகிழ்வு கொண்டோம்!

---

* அலெக்ஸாந்தர் புஷ்கின் (1799—1837): ருஷ்ய நாட்டுப் பெருங் கவிஞர்.

# 37. எனது சந்ததியாருக்கு

ஓஸிப் கோலிச்சேவ்

வருநாளில் உங்களது வளப்பமெலாம் பெருகும்!
வலிமையெலாம் விந்தையெலாம் எல்லையற்று வளரும்!
இருந்தாலும் நான்மட்டும் இன்னலுற்ற இற்றை
இருபத்து நூற்றுண்டாம் இதனைவிரும் பிடுவேன்!
இந்நூற்றி யாண்டிதனில் எந்தையுமே குதிரை
இழுத்திடுமோர் வண்டியினில் செல்வதையும் கண்டேன்!
தொன்னெடுவாய் நேர்வழிகள் தோற்றுகின்ற இன்றைச்
சூழ்நிலையில் மெய்யன்பும் சுற்றிவளைந் தேகும்!
சூதறியா நல்லுணர்வும் சோதனைக்குள் ளாகும்!
சொல்வதெனில் மலையேறும் சூழ்ச்சியொத்த நிலையே!
ஈதிருக்க, முதல்மனிதன் அயனவெளிக் கேகி
இறங்கியபின், நெஞ்சகத்தில் இருந்துவந்த நந்தம்
பொதுவுடைமை கண்காண உருவாகும் பொழுதில்...
புத்துலகின் எதிர்காலப் புதல்வர்களே! நீவிர்
புதுவாழ்வும் விந்தைகளும் புதுவலியும் மிஞ்சிப்
பொலிந்திடுவீர்! அதைநோக்கி முன்னேறிப் போவீர்!
இருந்தாலும் நான்மட்டும் இன்னலுறும் இற்றை
இருபத்து நூற்றுண்டை என்னிதயம் ஏற்பேன்!



# 38. உடுக்களை வென்ற சோவியத் மானிடன்

ஓல்கா பேர்கோல்ஜ்

காலைப் பொழுது; இந்நூற் ருண்டில்
கழிந்தது பாதிக் கதிகம்! விண்சேர்
கோலத் தாரகைக் குலங்கள் கண்ணைக்
கொட்டக் கொட்ட விழித்து வெளிறும்
வேளை யிதனில் விண்ணகம் நோக்கி
விரைந்தான் ஒற்றை மனிதன்! அவனும்
ஆளுக் காபத் தேதும் இன்றி
ஆருயி ரோடு மீண்டான் அவனி!

நாமும் அவனை நன்ருய்ப் பார்த்தோம்!
நம்மை யொத்த மனிதன் தானே?
நாமும் அவனை ஒத்தார் தாமோ?
நம்மில் ஒருவன் தானே விண்ணில்
ஏறிச் சென்ருன்? தாரா கணத்தின்
இயக்கம் தன்னை, இருள்-ஒளி தன்னை
சூரியன் உதயம் தன்னை, இரவு
தோயும் அந்தித் தோற்றம் கண்டான்?

ஆம்! அவன் சதையால் ரத்தத் தாலே
ஆனவர் தம்மில் ஒருவன் ஆமே!
பூமியில் பதினேழ் ஆண்டில் புரிந்த
பொன்ருப் புகழின் புரட்சியின் பின்னுல்
ஆண்டோர் நாற்பதும் நான்கும் ஆயின!
ஆயினும் இதுவரை அறியாப் புதுமையைக்
காண்பதோர் வேட்கை கருத்துள் மூளக்
ககனம் முற்றும் பறந்திடு கின்ருேம்!

இந்நாள் பூமியின் ஈர்ப்பினைத் தாண்டி
எம்மிடை ஒருவன் விண்ணிடை ஏகிப்
பறந்தான்! மீண்டும் பயணம் தொடங்கிய
பிறந்தமண் திரும்பும் பெற்றியும் பெற்றான்!
வந்தவன் சோவியத் மாநிலம் பயந்த
வாலிபன்! எம்மவன்! வான்வெளி தன்னில்
உந்திப் பறந்தான்! உயர்விண் ணரங்கில்
உடுக்களை வென்றே உலகிடை மீண்டான்!



உடு; நட்சத்திரம்; பதினேழ் ஆண்டு : 1917ம் ஆண்டில் நடந்த அக்டோபர் புரட்சி.

# 39. வாஸ்டாக்கின் வான்வெளிப் பயணம்

மைக்கேல் லெவோவ்

உலகையெலாம் வலந்திரிந்து மீண்டுவந்த கப்பல்
உயர்புகழை நமக்களித்த உன்னதமாம் கப்பல்
இலகுபுகழ் தனைச்சுமந்த அற்புதமாம் கப்பல்
இசைந்ததொரு அற்புதமாம் பெயரமைந்த கப்பல்
பெயரிதனை முதன்முதலில் சொல்லியபே ராளன்
பெயரெதுவோ? அவனிதயப் பேரரங்கில் தோன்றி
உயர்ந்ததுவோ இப்பெயர்தான்? உளங்கவர்ந்தேயென்னை
உவகையிலே ஆழ்த்திட்ட உத்தமன்தான் யாரோ?
செவிகுளிரும் பெயரிதனைச் செப்பியவன் தன்னைச்
சிறந்தவொரு கவிஞனென்றே சிந்தைதெளி
கின்றேன்!
புவிமனிதன் அவனென்றே புரிகின்றேன்! நெஞ்சம்
புளகமுற்றுக் களிக்கின்றேன்! அடடாவோ புதுமை!
வானகத்தில் பறந்ததுதான் வாஸ்டாக்! அதனுள்
வைரநிகர் ககாரினெனும் வாலிபனும் வீரன்
தானமர்ந்து இதழ்க்கடையில் புன்னகையைத் தாங்கித்
தாரணியைத் திட்டமுடன் வலந்திரிந்து மீண்டான்!
வெற்றியிதைக் கண்டவுடன் மக்களெலாம் கூடி
விண்ணதிர முழக்கமிட்டு விம்முற்றார்! அதற்குள்
மற்றுமொரு வாஸ்டாக்கும் வானரங்கில் ஏகி
வளையமிட்டு வளையமிட்டு வந்ததடா உலகை!
இப்போதும் எங்கேயோ, எவ்விடத்தோ மீண்டும்
ஏகுதற்குத் தயாராகி மேலுமொரு வாஸ்டாக்
ஒப்பற்ற வீரரொடும் இருக்கின்ற தென்னும்
உண்மையினை நாமறிந்தோம்! உவகைமிகப்
பெற்றோம்!
வார்த்தைகளை நாம்வீணில் வழங்குவதும் இல்லை!
வாஸ்டாக்கோ எந்நாளும் வானகத்தில் செல்லப்
பார்த்திடுவோம்! என்றென்றும் அதுபறந்து செல்லும்!
பாரகத்தில் வெற்றியுடன் நம்புகழும் பரவும்!

# 40. ஏகமனதான தீர்மானம்

மைக்கேல் விளாடிமோவ்

அன்றைக் காலையும், அந்நாள் படித்த
அந்தச் செய்தியும் ஆயுள் முழுதும்
என்றும் என்றன் இதய வரங்கில்
இறவா திருக்கும்! எவ்வெவர் மனத்தும்
அரும்பிய உணர்ச்சி! அகமகிழ் வுணர்ச்சி!
அயனப் பயணச் செய்தியை அந்நாள்
தெரிந்துளம் விம்மித் துடித்திட, தேகம்
சிலிர்த்திடும் உணர்ச்சி! செய்தியைக் கண்ணால்
பார்த்தேன்! படித்தேன்! பரவசம் உற்றேன்!
பார்வையை அகற்றப் பலமிலா தானேன்!
சீர்த்திகள் மலிந்து சிறந்திடும் எங்கள்
தேசத் தெதிர்நாள் சித்திரம் கண்முன்
நின்றிடக் கண்டேன்! இருபெரும் நெறியால்
நேருற இருபத் தாண்டுகள் நொடியில்
சென்றிடக் கண்டேன்! இதுவரை தெரியாத்
தேனொளி சிதறத் திருத்தாய் நாடு
ஒளிவிடக் கண்டேன்! ஒவ்வொரு சொல்லும்
உத்தமன் லெனினின் ஒண்மையை வாரி
அளித்திடக் கண்டேன்! ஆனந்த வாழ்வுக்
கானதோர் திட்டத் ததனின் வெற்றி
மேவிடக் கண்டேன்! "விவாதம் செய்ய
வேண்டிய" தென்று வெளியிட் டிருந்தும்
ஆவலின் அந்நாள் யாவரும் அதனை
அங்கீ கரித்தார்! அதனையும் கண்டேன்!

# 41. பள்ளிக்கு நல்வரவு

விளதிமிர் லிஃப்சிட்ஜ்

விடியற் கருக்கலொளி வெளுத்துப் புலர்வதற்குள்
விழிப்புற்றுச் சிறுவர்களும் சிறுமியரும் விரைவதுமேன்?
தொடுவானில் இளஞ்சிவப்புத் தோன்றிடுமுன்
அவரெல்லாம்
தூக்கம் கலைந்தெழுந்து படுக்கையிலே துள்ளுவதேன்?
நண்பரொடு காரணத்தை நானும் நவின்றிடுவேன்.
பண்புடனே பாலரெல்லாம் படுக்கையினை விட்டெழுந்து
கரிசனையாய் முகம் கழுவிக் காலை யுணவருந்தி
விரைவதுவும் பள்ளிக்குச் செல்லுமொரு வேகம்தான்!
பட்டணமே யானாலும் பட்டிதொட்டி யானாலும்
கிட்டத்தே யானாலும் தூரம்தான் என்றாலும்
ஏழ்வயது ஆகிவிட்டோர் எல்லோரும் பள்ளிசெலும்
வாழ்வதனை மேற்கொள்ளும் வழக்கமதே காரணமாம்!
என்றாலும் இன்றைக்கோ எல்லோரும் விடிவதற்குள்
நன்றாய் விழித்தெழும்பா நடத்தைகண்ட முர்ஜில்கா
வோவாவின் கம்பளியை உதறிப் பிடுங்கிவிட்டான்!
தாவிவந்த குளிர்நடுக்கம் தாக்கியதால் வோவாவும்
சுறுசுறுப்பாய் ஓர்கணத்தில் சோம்பல்விட்டுக்
கண்விழித்தான்!
மறுகணமே முர்ஜில்கா லியூடாவின் மனைக்கேகி
சன்னல்வழி யாய்ப்பார்த்தான்! லியூடாவோ
சாப்பாட்டை
இன்னமுமே முடிக்காமல் இருக்கின்ற நிலை கண்டான்!
"ஏனம்மா? உன்தட்டில் இருக்கின்ற இன்புட்டுத்
தீனியினைத் தின்றுவிட்டுச் சீக்கிரமே கிளம்பம்மா!
இல்லையெனில் தாமதங்கள் ஆகிவிடும்!" என்றவனும்
சொல்லிவிட்டு வாஸ்யாவைச் சுருக்காகப்
போயடைந்தான்.
"சிரத்தைகெட்ட சிறுபயலே! சொக்காயைத் தலைமாற்றித்
தரித்திருப்ப தறியாயோ? இத்தகைய தன்மையிலே

பள்ளிக்கே நீ சென்ருல் பாடத்தைக் கேட்பதற்கு
உள்ளே அனுமதிக்க ஒப்பார்கள்!" என்றுரைத்தான்.
பின்னரவன் செர்யோஷா தனைக்காணப் புறப்பட்டான்.
சின்னவன்தான் என்ருலும் செர்யோஷா முகம் கழுவிச்
சுத்தமாய் உடையுடுத்திச் சுறுசுறுப்பாய்ப் புறப்பட்டுச்
சித்தமொடு நின்றிருந்தான்! சீரிதனைக் கண்டவுடன்
சித்தம் மகிழ்ந்தவனுய் செர்யோஷா பள்ளிப்பைப்
பொத்தானை மாட்டிவிட்டுப் புறப்பட்டான் முர்ஜில்கா!
சின்னஞ் சிறியவளாம் மாருஸ்யா எனுஞ்சிறுமி
தன்னைப்போய் முர்ஜில்கா சந்தித்தான். அவள்மறந்த
பென்சில்கள் நிறைந்திருக்கும் பெட்டிதனை எடுத்தவனுய்
முன்சென்று அவளிடத்தே முர்ஜில்கா கொடுத்திட்டான்!
"நன்றிநன்றி. முர்ஜில்கா! நல்லபடி துணைசெய்தாய்!"
என்றவளும் மகிழ்ச்சியொடும் இனிமையொடும்
பதிலுரைத்தாள்.
பள்ளிமணி ஒலியலையைப் பரப்பிக் கணகணத்து,
"பிள்ளைகளே! வாருங்கள்! பள்ளியிலே நீங்களெல்லாம்
சேருகின்ற நாளிதுகாண்! ஆதலினுல் சிரித்தோடி
வாருங்கள்!" என்றழைத்து வரவேற்புக் கூறியது!
இத்தனையும் செய்தபின்னர் இப்போதோர் முர்ஜில்கா
மெத்தக் களைத்தவனுய் வாசல்நடை மீதமர்ந்து
ஓய்வெடுத்தான்; மூச்செறிந்தான்! என்ருலும்
உள்ளத்தில்
பாய்கின்ற நிறைவுணர்வால் பரவசங்கள் எய்திவிட்டான்!
காலை யிளம்பொழுதைக் கருத்துடனே பயன்படுத்தி
வேலைசெய்த திருப்தியிலே வீற்றிருந்தான்! ஆமாமாம்.
அத்தினத்தில் அவன்செய்த அரியதொரு சேவையினுல்
எத்தனையோ பாலரெலாம் பள்ளிக்கே ஏகிவிட்டார்!
உற்றதுணை புரிந்தவனும் உதவியதால், பாலரெல்லாம்
கற்றுச் சிறந்திடுவார்! பள்ளியிலே களித்திருப்பார்!

குழந்தைகளுக்கான கதைப் புத்தகங்களைப் பிரபலப் படுத்தவும், அவற்றைக் குழந்தைகள் நாடவும் சோவியத் நாட்டில் 'கதைப் புத்தக தினம்' நடத்துகிறார்கள். அத்தகைய தினமொன்றில் எழுதிய பாடல் இது. சாமுவேல் மார்ஷாக் சமீப காலத்தில் காலஞ்சென்ற சிறந்த குழந்தைக் கவிஞராவர்.

# 42. கதைப் புத்தக தினம்

சாமுவேல் மார்ஷாக்

இந்த விடுமுறையை எந்நாளும் உம்மனத்தில்
சிந்தித் திருந்திடுவீர், சின்னக் குழந்தைகளே!
இத்தினம்போல் நாமெல்லாம் என்றேனும் கண்ட
துண்டோ?
புத்தகங்கள்! குழந்தைகட்குக் கதைசொல்லும்
புத்தகங்கள்!
குழந்தைகளே! இந்நூல்கள் உமையெல்லாம் கூப்பிட்டு
அழைத்தேகும் உலகுபுகழ் அரண்மனையாம்
இவ்விடத்தே!

குறுகுறுப்புக் குணங்கொண்டீர் ஆனாலும் இங்கிருந்து
கருத்தோடும் அமைதியொடும் கதைகளை நீர் கற்றிடுவீர்!
உங்களுக்காய்க் கதைநூல்கள் உருவாக்கு வார்தமக்கு
இங்கேநீர் தீர்ப்புரைக்கும் நீதிபதி யாயிருப்பீர்!
எழுதுபவர் யாவருக்கும் எச்சரிக்கை! இந்நாளின்
எழுத்தாளர் எல்லோரும் எதிர்கால மானிடரை,
எல்லையற்ற வான்வெளியை இனங்கண்டு மீளவரும்
வல்லவரைக் கவனத்தில் வைத்திருக்க வேண்டுமன்றோ?

பிள்ளைகளே! பின்னாளில் பெரியவராய்ப் பலதொழிலில்
உள்ளவர்நீர் ஆனாலும், எங்கேதான் உறைந்தாலும்,
கதைநூல்கள் தினமிதனைக் கருத்தூடே நினைவூட்டும்
முதல்நூல்கள் எந்நாளும் உம்முளத்தின் முன்நிற்கும்!

சோவியத்து நாடுமுதல் ஜப்பான் கிரேக்கமென
மேவிடுபல் நாடுவரை விரிந்திருக்கும் மேதினியில்,
பிறப்பென்னும் இனமென்னும் பேதமெலாம் தான்கடந்த
சிறப்புடைய ஆண்பெண்கள் சேர்ந்தே தத்தமது
சக்தியினைத் தானறிந்து சாந்தியினைக் காப்பதற்காய்
இத்தினத்தில் மேலோங்கி எழுவதையும் காண்கின்றோம்!
உலகத்தின் எதிர்கால வாழ்வுக்கோர் உறுதியென
இலகிடுநம் பிள்ளையெலாம் நாம்வாழும் இப்புவியில்
அமைதியிலே வாழ்ந்திடுக! அமர்க்களத்தின்
பயங்கரங்கள்
குமைந்தொழிய, சாந்தியிலே குதூகலித்து வாழ்ந்திடுக!
இளவேனில் பருவத்தே எழில்கொழிக்கும் மலரினம்போல்
வளர்ந்திடுக! பொலிந்திடுக! வாழ்வெல்லாம் மலர்ந்திடுக!



# 43. கான்யா ஓர் அழுமூஞ்சி

எச். பார்ட்டோ

என்ன குரல், அது என்ன ஒலி?—பொழுது
ஏகவரும் பசு கன்றை யெண்ணி
முன்னும் கதறலோ?...இல்லை! அது—அழு
மூஞ்சிஎம் கான்யாவின் கூக்குரலே!
சிந்திய மூக்கும் சிணுங்கலுமாய்—கண்கள்
செக்கச் சிவந்திட அழுதழுது
முந்தியைக் கண்ணீரால் முழுக்காட்டும்—அழு
மூஞ்சி அவள் செயும் கூக்குரலே!
வீட்டை விட்டு வெளிச் சென்றுவிட்டால்—கான்யா
வீதியெலாம் ஒரே நாற்றமென்றே
மீட்டும் திரும்பியே வந்திடுவாள்—இனி
மேலெங்கும் சென்றிடேன் என்றழுவாள்!
வீட்டுக்குள் சுற்றியே வந்திடுவாள்—அதில்
வெறுத்துச் சலித்துளம் வெம்பிடுவாள்!
'பூட்டிக் கிடப்பதோ வீட்டுக்குள்ளே'—என்று
புழுங்கிப் புலம்புவாள்! பொங்கிடுவாள் !
'சாப்பிடு கண்ணே!' என்று கெஞ்சி—பெற்ற
தாயவள் காய்ச்சிய பால் கொணர்ந்தால்
'கோப்பை பெரிதாய் இருக்கு'தென்பாள்—'வேறு
கொண்டுவா!' என்றழக் குரலெடுப்பாள்!
அன்னையும் சின்னதோர் பாத்திரத்தில்—பாலை
ஆற்றியெடுத்தவள் அருகு சென்று
'சின்னஞ் சிறு கண்ணே! எழுந்திரடி!'—என்று
செல்லமாய்க் கொஞ்சிடும் வேளையிலே,
'பாலை யெடுத்துச் செல்! தேநீர் கொண்டா!'—என்று
பாடம் படிப்பாள் ! அடம் பிடிப்பாள் !
காலை யுதைத்துக் குதித்திடுவாள்!—இரு
கண்ணைக் கசக்குவாள்! அழுதிடுவாள் !

கட்டிலில் தூங்கிடச் சென்ருலும்—கான்யா
'கண்கள் உறங்கிட வில்லை!' என்பாள்!
தொட்டில்குழந்தைபோல்அடம் பிடிப்பாள்—கான்யா
துள்ளிவிழுந் தழத் தொடங்கிடுவாள்!
விக்கியும் முக்கியும் விம்மி விம்மி—கான்யா
வீறிட்டழுதிடும் குரல்கேட்டு
அக்கத்தில் பக்கத்தில் உள்ளவர்கள்—அது
ஆரென்று பார்த்திட உள்ளே வந்தார்.
உள்ளே வந்தவர் கண்களினுல்—கான்யா
உச்சி முதல் உள்ளங் கால் வரையில்
வெள்ளப் பெருக்கெனக் கண்ணீராய்—முகம்
வீங்கி யழக் கண்டார்! வியப்படைந்தார் !
"என்னடி கான்யா? ஏனழுதாய்!—வயது
ஏழும் முடிந்ததே! இன்னும் நீ
சின்னஞ் சிறிசோ? அழலாமோ?—கண்ணீர்
சிந்திச் சிணுங்கிடல் அழகாமோ?
ஆளான வயதேழு ஆனபின்னும்—நீ
அழுமூஞ்சிப் பிள்ளையாய் இருந்து வந்தால்
காளான் உன் மூக்கில் முளைக்குமடி!—ஜல்தி
கண்ணைத் துடையடி!" என்றுரைத்தார்!



# 44. இல்லை! இல்லை! இது வேறு!

விக்தர் கோஞ்சரோவ்

*இல்லையில்லை! இதுவேறு! இந்தியாவின் கதைவேறு!*
*சொல்வதெனில்—*
*நீர்சேராக் கருமசியின் நிறமொத்த கருநிழல்கள்*
*ஓர்பக்கம்; வெய்யோனின் உருக்கிவிட்ட கண்ணுடிக்*
*குழம்பைப்போல் தெருக்களிலே கொதித்தோடிப்*
*பரவுந்தீப்*
*பிழம்பொருபால்!*
*சிரங்குச் சொறி பிடித்து, சீழ்பிடித்துப் பஞ்சடைந்த*
*குரங்கொன்று அவ்வொளியில் கூசிக் கண்சுருக்கும்!*
*இல்லை! அந்தக் கதை வேறு! இந்தியாவின் நிலையதனைச்*
*சொல்ல வந்தால்—*
*ஊர்சுற்றிப் பார்க்கவந்த உல்லாச யாத்திரிகர்*
*ஓர்வட்டத் திற்பாதி உருவம்போல் வளையமிட்டுப்*
*பார்க்கின்றுர்!*
*பார்க்குங்கால் பகலவனின் வெய்யொளியில்,*
*சின்னஞ் சிறியவொரு சிறுகீரிப் பிள்ளையது*
*முன்னேடி வந்தாங்கே முகஞ்சிணுங்கி, மெலநின்று*
*பின்னும் ஒருதடவை பிணங்கிச் சிணுங்கியதே!*
*பிரகிருதித் திருத் தோற்றப் பேரிதயம் தனிற்பொதிந்து*
*தருகின்ற எழில்மீது தாளாத காதலுறும்*
*ஒரு கவிஞன் போலுமது உருக்காட்டி நின்றதுவே!*
*பின்னர் நிழ லூடிருந்து பெரியதொரு கருநாகம்*
*தன்னுருவை மெலக்காட்டித் தடமூர்ந்து வந்ததுவே!*
*இருளாலும் இரவாலும் இயற்றியதோர் உயிரென்ன,*
*மருளாலே ஆளாக்கி வளர்த்திட்ட பொருளென்னக்*
*கருநாகம் நெளிந்துவரக் கண்டவுடன் சிறுகீரி*
*உருவெல்லாம் புல்லரித்து உதறிப் படபடக்கப்*
*பெருமூச்சு விட்டெறிந்து பின்னடித்து உஷாராகித்*
*தேகத்து மயிர்க்கால்கள் சிலிர்த்து விறைப்பெய்த*
*நாகத்தை எதிர்நோக்கி நகர்ந்ததுவே!...*

கரியமணி சிறுபாசிக் கண்களிலே பெருமூர்க்க
வெறிகொண்ட ஒளிவேகம் வீசிக் கணகணக்க,
பயத்தோடு நெளிகின்ற பாம்புக்கோர் எச்சரிக்கை
நயத்தோடு செய்வதுபோல் நாட்டியமும் ஆடியதே!
கண்ணுடி தானணிந்து, கண்பறிக்கும் பலநிறத்து
வண்ணுடை தான்தரித்து, வாய்பிளந்து பிரமிக்கும்
ஊர்பார்க்க வந்திருந்த உல்லாசிகளை, மற்றும்
சூரியனை சுடுகாற்றை, சுகந்தம்சேர் பிரகிருதிப்
பேரழகைப் பற்றியவோர் பிரக்ஞை சற்று மில்லாமல்,
கீரியதும், நாகமதும் கிறுகிறுத்து ஒன்றையொன்று
நேர்நின்று எதிர்நோக்கி நெருங்கத் துணிந்தனவே!
இருவேறு உலகங்கள், இருவேறு உயிரினங்கள்,
இருவேறு மரணங்கள், இருவேறு மின்கொடிகள்
வெறிவேகத் தொடுதாக்கி வெம்போர் விளைத்தனவே!
அருவருக்கும் இருளுருவம் அமைந்திருந்த கருநாகம்
கருவருக்கத் துணிந்திட்ட காரியம்போல், கீரியதன்
சிறுவுடலைப் பிணைத்திறுக்கிச் செயலிழக்கச் செய்ததுவே!
ஒருகவிஞன் போலுமங்கு உருவளித்த கீரியதன்
பெருவேகக் கவிதையங்கு பிறப்பதற்குப் பாதையில்லை!
ஒருகணமும் நிற்காமல், ஓருணர்வும் இல்லாமல்,
ஒரு நினைப்பும் தோன்ருமல் உற்றகதை உரைப்பதுவோ ?
இல்லையில்லை! இதுவேறு! இந்தியாவின் கதையதனைச்
சொல்வதென்ருல்—
சிறுகீரிப் பட்டுடலைச் சேர்த்து நெருக்குமந்தக்
கருநாகம் தன்வாயின் கடுவிடஞ்சேர் பற்களினல்
வெறிகொண்டு தாக்குதற்கும் வேகந்தான் கொண்டதுவே!
பார்த்திருந்த நாங்களெல்லாம் படபடத்தோம்;
நிலையிழந்தோம்!
வேர்த்தோம்! "போதும்! இந்த வெறியாட்டக்
கொலையிதனை
நிறுத்" தென்று வாய்விட்டு நிமிடத்தில் கத்திவிட்டோம்!
இருந்தாலும்—
கருநிறத்துக் கடவுளர்போல், களிமண்ணைச் சுட்டெடுத்த
உருவம்போல் தாடியொடு உருக்காட்டும் பாம்பாட்டி

இந்துக்கள் இருபேரும் எதுவுமே பேசவில்லை!
இந்த நிலைமையிலே எல்லாம் முடிந்ததெனச்
சிந்தித்தோம்! மறுகணத்தில் சித்துவித்தை
செய்ததுபோல்
அந்தவொரு திருக்காட்சி!
சின்னஞ்சிறு கீரியது சிலிர்த்தே உடல்நெளித்து
தன் சிறிய பல்லிளித்து, தான்தெரிய வாய்திறந்து
கண்ணிமைக்கும் நேரத்தில் கருநாகத் தின் தலையைக்
கவ்விப் பிடித்ததனைக் கடித்துக் குதறியதே!
'எவ்விதத்தில் நிகழ்ந்ததிது?' என்பதனை யாமறியோம்!
அவ்வேளை :
கருநாகத் தின் தலையைக் கவ்விவிட்ட மறுகணத்தில்
குருதிபொங்கிப் புழுதியினில் கொட்டுவதைத்
தான்கண்டோம்!
இல்லையில்லை! இதுவேறு! இந்தியாவின் கதையதனைச்
சொல்வதெனில்—
கடுவிடத்தை வைத்திருக்கும் கருநாகந் தனைமரணக்
கொடும்பிடியால் பிடித்துயிரைக் குடித்ததுவே சிறுகீரி!
பின்னர் அந்தச் சிறுகீரி பெருமிதமும், பெருமகிழ்வும்
முன்னுவெற்றிக் களிசிறக்க முகந்தூக்கி, எமையெல்லாம்
அண்ணாந்து பார்த்துளத்தில் அறச்செருக்குக்
கொண்டதுவே!
அவிந்திருந்த உணர்வெல்லாம் ஆர்வமுடன் மேலோங்கக்
கவியாக எம்முன்னே காட்சியது தந்ததுவே!
ஒருவர் துணை இல்லாமல், உதவிகளும் இல்லாமல்,
பெருவீரன் தனைப்போலும், பெருங்கவிஞன் தான்போலும்
கருநாகம் தனைவெற்றி கீரியதும் கண்டதுவே!
திரையிட்டு மறைத்ததுபோல் தெரிகின்ற கிண்டலொளி
உறைகின்ற கண்களிலே ஒளிமிஞ்ச, எமைப்பார்த்து
சிறுகீரிப் பிள்ளையது சிரிப்பதுபோல், வாய்திறந்து
ஒருவார்த்தை சொல்வதுபோல் உணர்ந்திட்டோம்!
"கண்ணாடி தானணிந்த கண்ணாடிக் கண் படைத்த
அண்ணாத்தை மாருகளே! அரக்கர்களே! நானிங்கு
தனிமையிலே பாம்போடு சண்டையிட்ட காலத்தில்

இனிமையொடு நீர்கண்டு இன்புற்ற தென்னேயோ?
அழகோ? சத்தியமோ? அதுவன்றி வேறெதுவோ?
கழறுவீர்!'' என்றெம்மைக் கேட்பதுபோல்
கண்டுணர்ந்தோம்.

இவ்வுணர்வால் திடீரென்று இதயத்துள் வெட்கமது
கவ்விப் பிணைப்பதுபோல் கருத்துள்ளே மனச்சாட்சி
உறுத்தி வருத்துதல்போல் உணர்ந்திட்டோம்!...
ஒருகணமும் நிற்காமல், ஓருணர்வும் இல்லாமல்
ஒருநினைப்பும் தோன்றாமல் உரைப்பதுவோ இக்கதையை?
இல்லையில்லை! இதுவேறு! இந்தியாவின் கதை வேறு!



# 45. இந்தியக் கவிஞர்களுக்கு

இராக்லி அபாஷித்ஜே
(ஜார்ஜியக் கவிஞர்)

**போர்**முழக்கம் ஒழிந்தழிந்து, பூவுலகில் நின்றுலவும்
பொச்சாப்பும் பகையுணர்வும் வலுவிழந்து போயொழிந்து
பார்மகிழும் திருநாளில் பாட்டரங்கம் கூடட்டும் !
பரவசத்தோ டவ்வரங்கில் நான்வந்து பங்கெடுப்பேன் !
பாட்டரங்கில் ஒளிசிதறும் பந்தங்கள் நின்றெரிய,
பாடகரும், கவிஞர்களும் படைதிரண்டு கூடிவந்து
போட்டியிலே பங்கெடுத்துப் புதுப்புதிதாய்ப்
பாட்டுரைக்கப்
பொழுதலரும் வேளைவரை இரவெல்லாம் பொலியட்டும்!
தண்ணிலவுத் தேனொளியில் தானொலிக்கும்
பாட்டெல்லாம்
தாஜ்மகல் மேல்நிவர்ந்து எதிரொலித்துத் தாவட்டும்!
மண்ணுலகின் திசையனைத்தும் விம்மட்டும்! அத்தகைய
மாட்சிமிகும் கவியரங்கில் மாநிலத்தின் கவிஞரெல்லாம்
அணிவகுத்துத் திரளட்டும்! அவரவர்தம் தனித்திறமை
அடுத்தவர்க்குச் சளைத்ததில எனும்விதத்தில் ஆகட்டும்!
எந்தமது காகஸிய பூர்க்காவாம் இன்கவிதை
இந்தியநன் னாட்டினிலே எதிரொலிக்கச் செய்திடுவோம்!
இந்தியர்க்கும் கூர்க்கருக்கும் யாவருக்கும்
இயைந்ததுவாய்
எங்களது பாடல்களை யாமங்கு இசைத்திடுவோம்!
நந்தமது பாடலெலாம் நம்மிதயம் தனிலோங்கும்
நல்லுணர்வின் உறவோடு நாற்புறமும் ஒலிக்கட்டும்!
எந்தமது கலையுலகப் போட்டிக்கே இசைவுடனே
எழுந்தருள்வீர்! சர்தாரே! முகம்மதுவே! வருந்தருள்வீர்!
இரவினிலே கைகோத்து இணைந்திடுவோம்! என்றாலும்
எவர்மனத்தும் அச்சத்தை எழுப்புதற்கு இடமளியோம்!
அருமையுள்ள நண்பர்களே! அருகணைந்து வந்திடுவீர்!
அன்பார்ந்த பெய்ஸும்நம் அறக்களத்தில் சேரட்டும் !

வெண்ணொளியின் கதிர்பரப்பி மெல்லவிழும்
பால்நிலவின்

விந்தையிலே நாம்களித்து, பொறிபறக்கும்
வார்த்தைகள்சேர்

பண்ணொலியால், புதுமைமிகும் பாரதத்தின்
பெருமைகளைப்

பாடல்களால் புகழ்ந்தேந்திப் பாடிடுவோம்!
பரவிடுவோம்!

இந்தியநன் னாடுறையும் இளம்வயதுக் கன்னியர்தம்
எழில்மிகுந்த வனப்புகளை, என்னிதயம்
கொள்ளைகொளும்

விந்தையெனும் அன்னவர்தம் பட்டுநிகர் மென்கரத்தை
வேண்டுமட்டும் நாம்அங்கு வியந்தேத்திப் பாடிடுவோம்!
சிந்தையிலே நட்புறவைத் தூண்டிவிடும் தன்மையிலே
திபிலிஸ்முதல் டில்லிவரை திருப்பணியும் செய்திடுவோம்!
இந்திமொழிக் கவிதையொடு எங்களது கார்த்வேலி
இன்னிசையின் பண்ணமைப்பை இரண்டறவே
கலந்திடுவோம்!



[பூர்க்கா: காகேஸியப் பிரதேசத்துப் பாடல் வகை. பெய்ஸ்: பிரபல உருதுக் கவிஞர். கார்த்வேலி: ருஷ்ய நாட்டுப் பண். பாட்டரங்கம்: வட நாட்டில் விடியவிடிய நடக்கும் 'முஷைரா' என்னும் கவியரங்கம்; தமிழ்நாட்டு லாவணி போன்றது.]

# 46. நீலப்பறவை

இராக்லி அபாஷித்ஜே

இந்தியநன் னாட்டினிலே எங்கணுமே நான்திரிந்து
விந்தைமிகு ஏழுவகை வியப்பெல்லாம் கண்டறிந்தேன்!
என்றாலும் பளபளக்கும் இளநீலச் சிறுகுருவி
ஒன்றையான் கண்டதையே விந்தையிலும்
விந்தையென்பேன்!

என்னாட்டின் பறவையது! என்னருமைத் திருக்குமரன்
தன்னையே ஜீலத்தின் கரையருகே தான்காணப்
பெற்றாலும் இத்தகைய பெருவியப்பை யானடையேன்!
உற்றதொரு நண்பனைப்போல், உற்பவித்த தாய்நாட்டின்
திசையிருந்து வீசுகின்ற தீஞ்சுவைசேர் மாருதம்போல்
விசைபிறந்து என்தலைமேல் விறுட்டென்று தாவியதே!
என்னருமைக் கண்மணியே! என்தலையைத்
தொடுவதுபோல்

துன்னென்று நீபறந்தாய்! என்னுளத்தைத்
தொட்டுவிட்டாய்!

வண்ணநிறச் சிறுகுருவீ! வளையமிட்டுச் சுழன்றுயர்ந்து
விண்ணகத்தில் நீபறக்கும் விந்தையிலே கண்டதென்ன?
கீழுருளும் பனிப்பாறை கிடுகிடுக்கும் கர்ச்சனைபோல்
பேழ்வாயின் யானையொன்று பிளிறுகின்ற ஒலிகேட்டேன்!
என்றாலும் நீஎழுப்பும் இன்னொலியை யான்எங்கு
சென்றாலும் நினைத்திருப்பேன்! சிந்தையுளே
கேட்டிருப்பேன்!

தாயகத்துச் சோதரர்கள் தானனுப்பும் வாழ்த்தொலியை
நீயெனக்கு எடுத்துரைக்க, நீள்இமய மலைகடந்து
பிறந்தகத்தைப் பின்விடுத்துப் பிரியமுடன்
வந்தனையோ?

பறந்துவரும் நீலநிறப் பறவைகளே!
வாழ்த்துரைத்தேன்!

---

(குறிப்பு: பறவைகளின் தேச சஞ்சாரத்தைக்கண்டு பாடியது.)

# 47. காலைப் பொழுதில் டில்லி

அனதோலி சோவ்ரோனேவ்

புள்ளினத்தின் ஒளியார்ப்பப் பொழுது புலர்கிறது ;
வெள்ளென்று கீழ்வானில் வெதுவெதுப்புப் புரையோடச்
செக்கர் படர்கிறது ; செல்பவராய் வருபவராய்
மக்கள் தெருக்களிலே மாகடலின் அலைத்திரளின்
ஏற்றம் இறக்கமென இயங்குகின்றார்; இத்தகைய
தோற்றத்தில் கண்விழிக்கும் தொல்புகழ்சேர் டில்லிநகர்!
புலரும் இளம்பொழுதின் புல்லாங் குழலிசைபோல்
மலரும் கனிவகையும் மலிந்து மணம்பரப்பும் ;
நீளவிளந் தெளிவின் நிறத்தில், செம்பழுப்பில்
சேலைவகை கண்கவரும்; செல்கின்ற ரயில்வண்டி
உங்களொடு என்னையுமே உரத்தே அறைகூவும்;
செங்கோட்டை வெளியினிலே சின்னஞ் சிறார்பலரும்
களித்துவிளை யாடிடுவார்; ககனத்து விமானங்கள்
தளத்தினிலே மெதுவாகத் தாழ்ந்திறங்கும்; மென்மலராம்
கண்மூடித் தூங்குகின்ற கைக்குழந்தை கண்ணிமை
போல்
மென்மையோடும் தன்மையொடும் விளங்குகின்ற டில்லி
நகர்!
கனிந்திருக்கும் ஆரஞ்சுக் கனிவகைகள் நடைமேடை
தனிலெங்கும் நிறைந்திருக்கும்; தட்டியிட்டு வெயில்
மறைத்த
பத்திரிகைக் கடைகளிலே பாவையர்கள் சிரம்சாய்த்துப்
புத்தகத்தில் ஆழ்ந்திருப்பர்; புதிர்கள் நிறைந்திருக்கும்
கோவில்களும் அங்கிருக்கும்; குடிமக்கள் தம்முழைப்பால்
ஆவலொடு சரித்திரத்தை ஆக்கிப் படைத்திடுவார்;
இத்தகைய தோற்றத்தில் எழில்வண்ணத் தாலான
சித்திரம்போல் காலையிலே சிறந்தொளிரும் டில்லிநகர்!
என்றென்றும் கதகதப்பாய் இருக்கின்ற நாடுகட்குச்
சென்றேகும் பெருவழிகள் ; சிந்தை தனைமறந்த
கனவினிலே யமுனைநதி களகளக்கும்; வெண்புறவின்

இனமதன்மேல் சாந்திமயக் கீதம்இசைத் தகவும்;
நீலநிறம் துளிகலந்தாற் போலிருக்கும் மரக்கொம்பில்
கோலவண்ணப் பூக்குலங்கள் கொத்தாகப் பூத்திருக்கும்;
சிந்தைத் துணிவோடும் புதுமையொடும் திட்டமிட்ட
ஐந்தாண்டுத் திட்டங்கள் அயராது செயலாற்றும்;
சத்தியமும் நற்கனவும் சங்கமித்துப் பெருவாழ்வைச்
சித்திக்கச் செய்திடுமோர் எதிர்காலத் திசைநோக்கி
முன்னேறிச் செல்வதிலே முனைந்திருக்கும் திருக்காட்சி
தன்னைப் புணர்த்திநிற்கும் டில்லியெனும் தலைநகரம்!



கவிஞர் காரா ஸீத்லேவ் இந்தியாவுக்கு விஜயம் செய்தபின் தமது இந்திய விஜயம் பற்றிய எண்ணங்களைப் பல கவிதைகளாக எழுதினர். அவை 'இந்திய மலர்கள்' என்ற பெயரில் புத்தக வடிவம் பெற்றுள்ளன. அந்தக் கவிதைகளில் ஐந்து கவிதைகள் இங்கு இடம் பெறுகின்றன.

# 48. இந்திய விருந்துபசாரத்தின் மலர்கள்

—காரா ஸீத்லேவ்
(துருக்மேனியக் கவிஞர்)

எவ்வளவோ நெடுந்தூரம்
ஏகிடினும் யான்சென்ற
அவ்வழியில் எப்போதும்
அழகியபல் நறுமலர்கள்
எழில்கொழிக்கக் கண்டிட்டேன்!
நட்புறவின் இன்கரங்கள்
கழுத்தினிலே மாலையிட்டுக்
கௌரவிக்கக் கண்டேன்யான்!
விருந்தினரை வரவேற்கும்
இந்தியர்தம் வியத்தக்க
அருந்தகைமை எனக்களித்த
நறுமலரே அவையாகும்!

வானூர்தி விட்டிறங்கி
வந்ததுமே வான்நிறைத்து
மேனிமிர்ந்து கோஷித்த
விண்ணொலியை நான்கேட்டேன்:
"இந்தியரும் உருசியரும்
சோதரர்கள்! சோதரர்கள்!"

இந்திமொழிக் கோஷம்தான்!
என்றாலும் இனம்புரியா
விந்தையல்ல! நாமிருவர்
வெகுநாளாய் நமக்குள்ளே
சொந்தமுடன் பந்தமுடன்
சொல்லிவரும் கோஷம்தான்!

இவ்விதமாய் யாமங்கு
மெல்லமெல்ல இணைசேர்ந்து
செவ்வியுடன் வளர்ந்திட்டோம்!
சீக்கிரமே என்னையவர்
'இந்திய'னென் றழைத்திட்டார்!
என்றனது உடற்தோலின்
சொந்தநிறம் கறுத்ததனால்
சொல்லவில்லை! எங்களது
இதயங்கள் ஒன்றெனவே
இணைந்ததனால் யாமந்தப்
புதுமையிலே சிந்தனையும்
பொருந்திவரக் கண்டிட்டோம்!

எங்கள்திரு நாட்டுக்கு
யான் திரும்பும் வேளையிலே
உங்கள்திருத் தோட்டத்தின்
உவகைமிகும் மலர்க்குலத்தைப்
ஈத்துவந்தீர்! தொலைவினிலே
இருக்குமென் றன் தோட்டத்தில்
பூத்தொளிர்ந்து மணம்பரப்பிப்
புன்னகைக்கும் அம்மலர்கள்!
விருந்தினரை வரவேற்கும்
இந்தியர்தம் வியத்தக்க
அருந்தகைமை நிறைந்தொளிரும்
மலர்க்குலமே அவையாகும்!

# 49. பிணைந்த கைகள்

காரா ஸீத்லேவ்

காலைப்பொழுதில் பிலாய்நகரில்
கட்டிடவேலைக் காரரெலாம்
வேலைதொடங்கும் சுறுசுறுப்பை
வெகுவாய் நினைவு கூர்கின்றேன்!
வாழும்தாய்நாட் டிளையோரும்
வால்காநதிக்கரை வாலிபரும்
தோழமைபூண்டார்! சந்தித்தார்!
சோதரர்போலே கைகோத்தார்!
இருவருமொருவர் எனக்கலந்து
எனக்குத்தோற்றம் அளித்தனரே!
இருவரும்பிலாயில் நாள்தோறும்
இளக்கிடும் உருக்காய் ஒன்ருகி
வருபரம் பரையினர் கண்டறியும்
வண்ணம்ஒற்றுமை பூண்டிருந்தார்!
உருசியத்தாரும் இந்தியரும்
ஒன்ருய்ப்படிமேல் நின்றிருந்தார்!
ஒன்ருய்க்கலந்த நட்புறவின்
உயரியசின்னம் எனவாங்கே
நின்ருர்! அவர்தம் நட்புறவோ
இறவாதென்றும் நிலைத்திருக்கும்!



(குறிப்பு: பிலாய் வட்டாரத்திலிருந்து எழுதியது.

# 50. இந்திய மகள்

காரா ஸீத்லேவ்

காலையில் நடுங்கும்
　　பனித்துளி யென்னக்
கருக்கொளி பாய்ந்த
　　ரோஜா மலரும்
கோலம் கண்டொரு
　　குயிலும் உவகைக்
குறிப்பில் இன்னிசைப்
　　பாடலைக் கூவும்!
இளவெயில் பருவத்
　　திந்திய மண்ணில்
இன்னரும் பட்டினை
　　யொத்திடும் மேனி
வளமிகும் இந்திய
　　மகளினை ஓர்நாள்
வழியினிற் காணும்
　　வாய்ப்பினைப் பெற்றேன்!
இந்திய மகளே!
　　நீயொரு ரோஜா
எழில்மலர் போலே
　　பூத்திருக் கின்றாய்!
சிந்தை கவர்ந்த
　　குயிலும் பாடல்
செப்பிடும் உண்மை
　　இப்பொழு தறிந்தேன்!
பொருந்திய நின்னெளி
　　வதனப் பொலிவில்
புருவத் தாடே
　　நுதலில் திலகம்
இருந்திடும்! அதுவோ
　　இனியதோர் கீதத்
திறுதியைக் காட்டும்
　　முத்தாய்ப் பாகும்!

# 51. தாகூர் இல்லத்துக்கு விஜயம்

காரா ஸீத்லேவ்

இந்தியநன் னாட்டினிலே எங்கணுமே நான்திரிந்து
விந்தைநிறை அழகையெலாம் கண்டுள்ளம்
மிகவியந்தேன்.
என்றாலும், பலநாளாய் இதயத்துள் ஓராசை
நின்றதுண்டு; தாகூரின் இல்லத்தை நெஞ்சாரக்
கண்டுவிட வேண்டுமெனும் கருத்துத்தான்! அவ்வாறே
கண்டுகொண்ட மகத்தான கணப்பொழுதை
நான்மறவேன்!
விரிநீலக் கடற்பரப்பும் வெம்மைமிகும் பகலொளியும்
தெரிகின்ற கல்கத்தா நகரத்துத் தெருவொன்றில்
ஆர்வமுடன் நான்புகுந்து அவர்வதிந்த இல்லத்தைப்
பார்வையிட்டேன்! அதுவரையில் நான்பார்த்து
வந்ததெலாம்
கோலாகலம் மிகுமாட கூடங்கள், அரண்மனைகள்,
ஆலயத்தின் பிரகாரம் ஆன இவைகளைத்தான்!
என்முன்னே அக்கணத்தில் இருந்ததெலாம் எளிமைமிகு
சின்னதொரு கட்டிடம்தான்! செம்பொன்னால்,
வெண்சலவைக்
கல்லால் இழைக்காது, காட்டுமரத் தாலிழைத்த
இல்லம்தான்! அவ்விடத்தே இனியமணம் தனைப்பரப்பும்
வண்ணநீர் ஊற்றுகளோ, வளம்மிகுந்த பொற்சரடோ,
கண்கவரும் லஸ்தர்களோ காணவில்லை! மாறாகக்
கருமைகொண்ட எளியதொரு முகட்டைத்தான்
கண்டறிந்தேன்!
இருந்தாலும் காலத்தின் இயற்கையினால் கறைப்பட்ட
பொருள்களுக்கு மத்தியிலே தாகூரின் பேரிதயம்
அருள்பரப்பி நின்றதையும் ஆங்கேநான் கண்டறிந்தேன்!
எந்தவொரு புகழ்வண்ணச் சித்திரமும் இணைநில்லா
விந்தையென ஆங்கிருந்த மேசைக்கும் மேலாக,
கவிஞரவர் இயற்றியதோர் கவிதையொன்று சட்டமிட்டுப்

பவித்திரமாய்த் தொங்கியொளி பரப்புவதைக்
கண்டறிந்தேன்!
ஆடம்பரம் மிகுந்த ஆலயங்கள், பளபளப்பாய்
வேடமிட்டுத் தோற்றுகின்ற வெளிப்பகட்டு விளம்பரங்கள்
ஆனவற்றைக் கண்டே அதிசயிப்பார் மானிடர்கள்!
ஆனாலும் அத்தகைய டாம்பீகம் அத்தனையும்,
இனிமையொடும் எளிமையொடும் இசைந்திருக்கும் அவர்
கவிதைத்
தனியொன்றுக் கீடாமோ? தரளமணி மாலையெனக்
கதிர்பரப்பி, மானிடர்தம் சிந்தையெலாம் தான்கவரும்
அதிசயமாய், உலகினர்தம் அரியபல செல்வத்துள்
செல்வமதாய், எந்நாளும் சிரஞ்சீவி யாயிலங்கிப்
பல்விதத்தும் உதவுமவர் பாட்டுக்கே ஈடாமோ?
அவருளத்தை விருந்தளிக்கும் அவர்கவிதை!
என்னுளத்தை
அவர்கவிக்கே அதிதியென இந்நாளில் அர்ப்பணிப்பேன்!



# 52. கல்கத்தா

காரா ஸீத்லேவ்

கரையெறியும் கடலலைகள் கல்கத்தா நகரின்
கதவத்தை மெலத்தட்டும்; கானமுமே பாடும்;
திரையெறியும் நுரையதனைத் திரட்டிவலைப் பின்னல்
திறமையுடன் நெய்துவரும்; தினமுழுதும் சோராத்
துறைமுகத்தில் சரக்கெல்லாம் துரிதமோ டிறங்கும்;
தோணிகளும் விரைந்தோடும்; கப்பல்பல கூவும்.
மறப்பதற்கே அரிதான மாநகரம் ஆங்கே
மந்தையெனக் கடலலையைக் காற்றென்னும் மேய்ப்பன்
விரட்டிடுவான்; பறவைகள்போல் விண்ணென்று தாவி
விரைந்தோடிக் கப்பலுக்குள் வாழைப்பழம் வீழும்;
இரவியொளி பகலினிலே கதகதப்போ டெரியும்;
இரவினிலோ தண்மதியம் இனியவொளி சொரியும்.
துறைமுகத்தை விட்டகன்று கரையருகே கண்ணில்
தோன்றியதோர் இல்லத்தை நோக்கியவண் சென்றேன்.
கரையடுத்த இல்லத்தின் கற்களெல்லாம் அந்தக்
கவியரசன் தாகூரின் புகழ்பாடக் கண்டேன்.
அதிதியென வந்தவெனை ஆர்வத்தோ டாங்கே
அவரேயென் முன்வந்து வரவேற்றுற் போல
புதியதொரு கற்பனையில் பூரித்தேன். அந்தப்
போதினிலே அவரென்னைப் புல்லியுப சரித்து
முதியசிரந் தனைத்தாழ்த்தி என்னிடத்தில் பேச
முனைந்திட்டார். பின்னரந்த முதியவர்தம் நகரின்
அதிசயத்தைக் காண்பதற்காய் இருபேரும் ஒன்றாய்
ஆவலுடன் எழுந்திருந்து வழிநடந்து சென்றோம்.
அரியபல கற்பனையில் ஆழ்ந்திருந்த போதும்
அவர்நடந்து சென்றிட்ட வழிகடந்து அந்தப்
பெரியபஜார் வீதிக்கே வந்திட்டோம். ஆங்கே
பேசுகின்ற கிளிகண்டோம்; வாணிபரின் கூட்டம்
உரிமையொடு நமையழைக்கும் உரத்தகுரல் கேட்டோம்;

உறுமிவிட்டுப் பாய்ந்துசெலும் மோட்டாரும் கண்டோம்.
அரியபல பூப்போட்ட அழகிய பட்டாடை
அணியணியாய்க் காட்சிதரும் அதிசயமும் கண்டோம்.
சரிகைப்பொன் னிழைகொண்டு சமைத்த துகில் வர்க்கம்
தகதகத்துக் கண்பறிக்கும் காட்சியையும் கண்டோம்.
பெருமையுடன் இந்தியத்தாய் பெற்றெடுத்துத் தந்த
பெண்குலத்தார் அருந்துதற்கு நன்னீரை மொண்டு
தெருவழியே மண்குடத்தைத் தோள்களிலே தாங்கித்
திருமுகத்துப் பொலிவோடு செல்வதையும் கண்டோம்.
என்னருமைக் கல்கத்தா திருநகரே! உன்னை
இன்றேதான் கண்டேனே? இல்லையென்று சொன்னால்
உன்னைவெகு நாட்களுக்கு முன்னமேயான் தாகூர்
உதவியினால் கண்டேனே? உறவுங்கொண் டேனே?



1930 செப்டம்பர் 14-ம் தேதியன்று தாகூர் சோவியத் யூனியனிலுள்ள வீடற்ற அனாதைச் சிறுவர்களின் குடியிருப்பான முதல்குழந்தைகள் கம்யூனுக்கு விஜயம் செய்தார். அவ்வமயம் கவிஞர் அ. பிலதோவ் அந்த அனாதைக் குழந்தைகளில் ஒருவராக அங்கிருந்தார். பின்னர் வளர்ந்து பெரியவராகி, தொழிலாளி வர்க்கக் கவிஞராக உருப்பெற்ற பிலதோவ் இந்தக் கவிதையில் தாம் பால்யத்தில் சந்தித்த தாகூரின் வரவை நினைவு கூர்ந்து பாடுகிறார்.

# 53. குழந்தைகள் கம்யூனில் தாகூர்

அலெக்சாந்தர் பிலதோவ்

**ப**னிபெய்யும் பருவமது; என்றாலும் பகலவனின்
இனிமையினை யாமுணர்ந்தோம். இந்தியநன் னாட்டினது
தருவினங்கள் எம்மருகே தாமோங்கி வளர்வதுபோல்
ஒரு புதுமை! அமைதியொடும் உள்ளத்தே ஆவலொடும்
அவராருகே அமர்ந்திருந்தோம். அழகுமலர் இதழ்போலே
குவிந்திருந்தோம்! மலரிதயம் போலவரும்
கொலுவிருந்தார்!

கீதமொன்றை யாம்கூடிப் பாடினோம்; கேட்டிருந்த
போதாங்கே தாகூரும் புன்னகையும் தான்புரிந்தார்.
யுத்தத்தின் சீரழிவால் உருக்குலைந்து போகாமல்
பத்திரமாய்க் காப்பளித்து, பாருலகில் அனாதைகட்குக்
குடியிருக்க நல்வீடும் குடும்பத்துச் சூழ்நிலையும்
கடிதளித்து வாழ்வளித்த காட்சியினை எம்மிடத்தே
கவிஞரவர் கண்ணுறக் கண்டிட்டார் என்பதையும்
குவிந்திருந்த நாங்களெலாம் அறிந்தோம்;
குதூகலித்தோம்.

பெற்றெடுத்த தந்தையர்தம் பெயரறியா, பெற்றோர்கள்
உற்றளிக்கும் ஆதரவை உணர்ந்தறியாப் பற்பலராம்
பிள்ளையர்கள் தங்களது பிரமிப்பும் நட்புணர்வும்
உள்ளொளிரும் கண்களினால் உற்றவரை நோக்கிடவும்,

அன்னவரைத் தாகூரும் அருமையுடன் எதிர்நோக்கித்
தன்னிதயத் தன்பொளியால் தழுவிமனம் குளிர்ந்தார்.
உள்ளத்தைத் திறந்தாங்கே ஒன்றுபட யாமவரை
மெள்ளக் கவனிக்கும் வேளையிலே, ஆங்கவரும்
அன்னியராய்த் தோற்றுமல், ஆண்டில் மிகக்குறைந்த
சின்னவராய்த் தோற்றியதைக் கண்டோம்;
சிலிர்ப்புற்றோம்.

எமைவளர்க்கும் செவிலியெனும் இரும்பாலே உருக்காலே
தலைமையவர்க்கு நாங்களெலாம் அன்போடு
தானுரைத்தோம்.

இரவியொளி போலெமது எதிர்காலம் ஒளிபரப்பி
வரவிருக்கக் கண்டறிந்தோம்; வயல்களிலும் ஆலையிலும்
நாங்களெலாம் பணியாற்றும் நாளையிலே, தாகூரின்
ஓங்குபுகழ் நாட்டுக்கு உதவிக் கரம்நீட்டித்
தொண்டாற்றித் துணைபுரியும் சூழ்நிலையை ஓர்நாளில்
கண்டாலும் கண்டிடுவோம் என்பதையும்
கண்டுணர்ந்தோம்.

சென்றுவிட்ட முன்னைச் சிந்தித்துப் பார்க்கின்ற
இன்றைக்கோ? எம்முடைய இனிய திருக்குமரர்
எல்லோரும் ஆளாகி வளர்ந்துவரும் இந்நாளில்,
நல்லுணர்வும் உள்ளன்பும் நட்புறவும் கொண்டவராய்
இந்தியநற் பூமியினில் யாங்களெல்லாம் உருக்காலே
எந்திரத்தின் உலையதனை இயற்றிப் பணிபுரிந்தோம்.
இந்தியர்கள் தம்மோடு யாங்களெலாம் பிலாய்நகரில்
நந்தா ஒளிவழங்கும் நட்புறவின் தீப்பிழம்பை
மூட்டுகின்றோம்! அந்நெருப்பும் மூண்டெழுந்து
மேலோங்கி

ஆட்டம் கொடுக்காமல், மங்கலொளி அறியாமல்
எந்நாளும் நின்றெரியும்! தாகூரே! இறப்பறியாப்
பொன்னான உம்மிதயம் போலதுவே ஒளிபாய்ச்சும்!

கவிஞர் வள்ளத்தோல் 1951-ம் ஆண்டில் மாஸ்கோவுக்குச் சென்றிருந்த சமயத்தில் அங்குள்ள லெனின் சமாதிக்குச் சென்று அஞ்சலி செலுத்தினார். அவ்வாறு அஞ்சலி செலுத்திய சமயத்தில் அவர் எழுதிய பாடல் இது.

# 54. லெனின் சமாதி முன்னால்

மலையாள மகாகவி வள்ளத்தோல்

## 1

பேரெழில்சேர் பாரிசும், பெருமிதஞ்சேர் லண்டனொடும்
சீர்கொழிக்கும் நியுயார்க்கும் சேர்ந்தொன்றாய் ஆனதொரு
மாநகராய்க் காட்சிதரும் மாஸ்கோவைக் கண்ணெடுத்துக்
காணுகின்றோர் வியப்புளத்தே கண்டறிய மாட்டாரோ?

புத்தெழில்சேர் விசாலமொடு பொலிந்திருக்கும் மாஸ்கோவின்
மத்தியிலே வாய்த்ததொரு மைதானச் சதுக்கத்தில்
மேட்டிமையாய் உடையணிந்தும் மிடுக்கோடு நடைநடந்தும்
கூட்டமிட்டு மக்களெலாம் குழுமுகின்றார்! ஆங்கமைந்த,
வழவழப்பாய் கால்வைத்தால் வழுக்குகின்ற தளவரிசை
பளபளக்கும் கருஞ்சலவைப் படிக்கட்டில் ஏறுகின்றார்!

படிக்கட்டின் மேலேறிப் பார்க்கையிலே, கீழமைத்த
அடிக்கட்டின் அரங்கத்தே அமைந்ததொரு பீடத்தில்
மேதகவு நிறைமனத்தை மேவியவ னும்லெனினின்
பூதவுடல் காட்சிதந்து பொலிந்திருக்கக் கண்டறிவோம்!

மின்விளக்குத் தொகைசிதறும் வெண்ணொளியில் அன்னவன்தன்
பொன்னுடலும் பளபளக்கும்! புத்தம் புதுமைநிறை
காலையிளம் பொழுதலர்ந்தாற் போலுமது காட்சி தரும்!

'போலும்' என்று சொல்லுவதும் பொருத்தமிலா
வார்த்தையன்றே!
இருட்டில் கிடந்துழன்ற இரஷ்யாவின் காரிருளை
விரட்டி யடிக்கவந்த விடியலிளம் பொழுதே
உத்தமனும் லெனின்தானே! உலகையெலாம்விழிப்பூட்டிச்
சித்தம் தெளியவைத்த செங்கதிரும் அவனன்றே?

சொந்தமுள்ள நாட்டினரும், சோதரநல் லுணர்ச்சியொடு
வந்தபல விருந்தினரும், வழிபாடு செய்யவரும்
திருநாட்டின் கோயிலது! தேசத்தின் இருள்கடிந்த
குருநாதன் பொன்னுடலம் குடியிருக்கும் கோயிலது!
கோயிலதன் சன்னிதியைக் குறுகியதும் நாங்களந்தத்
தூயவனுய் மூர்த்திக்குத் துய்யமலர் அருச்சித்தோம்!
விடுதலையாம் மார்க்கமன்றி வேறுவகைப் பாதையிற்கால்
படுதலையே அறியாத பாதங்கள் தமைக்கொண்ட
புனிதன் திருவடியைப் பூசித்து உளம்போற்றி
இனிதாய்த் தலைவணங்கி இதயம் களிகூர்ந்தோம்!

## 2

விண்ணுலகை அவனுவி மேவியபின் இன்றைக்கும்
எண்ணுகின்ற இருபத்தி ஏழாண்டு போனபின்னும்
எட்டாத் தொலைக்குலகின் எதிர்கால வாழ்வியலைத்
தட்டாது கண்டறிந்து தரிசித்த அத்தகையோன்
கண்ணிரண்டும் இமைமூடிக் கவிந்திருக்கக் கண்டாலும்
மண்ணுலகின் நலம்தனையே மனத்தெண்ணித்
தியானிக்கும்
அறிதுயிலில் ஆழ்ந்திருக்கும் அதிசயமே தானன்றிப்
பிறிதில்லை என்றுணரும் பிரமையே மனத்தோங்கும்!

பேரரசன் ஜாரென்னும் பெயருடைய வஞ்சமகன்
ஈரமிலா தரசாண்ட இழிதகவால், வெங்கொடுமை
நரகக் குழிவிழுந்து நலிந்திட்ட மக்கள்தமைக்
கரங்கொடுத்துக் கரையேற்றிக் காப்பாற்றி, அன்னவர்தம்
நசிவுதனைத் துடைத்த நாயகனின் திருக்கரங்கள்
அசைவற்று இருபுறமும், அந்தோ! கிடந்தனவே!

## 3

மாந்தர்தமைச் சமமாக மதிக்குமொரு மாண்புடைய
ஏந்தலவன் லெனின் என்பான் இளைத்துக் களைத்துவிட்ட
உருஷியத்தை முறுக்கேற்றும் உணர்வேற்றும்
கதிர்க்குலத்தை
வருஷிக்கும் சூரியனாய் வையகத்தில் வந்துதித்தான்!

## 4

இந்தியநன் னாட்டினர்தம் இழிவகற்ற அகிம்சையெனும்
சந்திரனைத் தோற்றுவித்தான் சத்தியவான்
காந்திமகான் !
இந்தஇரு வீரர்களும் இருள்விலக்கி ஒளிவழங்கும்
சந்திரனும் சூரியனும் தாமாவார் நமக்கன்றோ?

இன்னவரில் ஒருதலைவன் இவ்வுலகின் புண்களுக்குப்
பொன்னிழையால் நெய்தவொரு புனிதத் திரைகிழித்துக்
கட்டுவித்தான்! மற்றவனோ சாந்தியெனும் களிம்பதனை
ஒட்டுவித்தான்! என்பதைநாம் உணர்ந்தறிய
மாட்டோமோ?
இருபேரும் இவ்வுலகில் இணையற்றுத் தான்விளங்கும்
பெருவீர நாயகர்தாம்! பேசரிய கொடுங்கொன்மைக்
குறைபோக்கி வெற்றிகண்டு, குவலயத்தே கொடுங்கோலர்
சிறைமீட்டு வந்தஇரு தேசத்தின் செம்மல்கள்தாம்!

## 5

தலைவனவன் பொன்னுடலைத் தைலமிட்டுப்
பேணிவைத்த
நிலையதனைக் கண்ணார நெஞ்சாரக் காட்டும்அந்த
அடிக்கட்டின் அரங்கத்துக் கருகினிலே முழவுயரப்
படிக்கட்டு டன்அமைந்து பசும்புல்லின் நற்படுகை
தளதளக்க, வெண்ணிறத்துச் சலவைக்கல் சின்னங்கள்
பளபளக்க விளங்குமொரு பீடமொன்றைப்
பார்த்திட்டோம்

சொந்தத்தாய்த் திருநாட்டுச் சுதந்திரத்துக் காய்ரத்தம்
சிந்திஉயிர் விடுத்த தியாகிகளாம் வீரர்களே
ஆங்கிருந்த பீடத்துக் கடியினிலே எந்நாளும்
நீங்காத் துயில்வசத்தே நிரந்தரமாய்ப் பட்டுவிட்டார்!
வீரர்குலச் செல்வங்காள்! வீழ்ந்துபட்ட நீரெல்லாம்
பாரகத்துத் திருமண்ணே பாசறையாய்க் கொண்டு
விட்டீர்!

பூதலத்துள் துஞ்சுமுங்கள் பொன்னுன திருமேனி
மீதினிலே பசும்புல்லே மேல்வளர்ந்து உமைப்போர்த்தும்!
என்ருலும் உங்களது இனியதிருத் தாய்நாடு
நன்ருகி விட்டதையா! நாளெல்லாம் நெடுந்துயிலில்
சொக்கிக் கிடந்துழன்ற சோம்பல் தனேமுறித்துப்
பொக்கென்று விழித்தெழுந்து புதுவாழ்வு பூண்டதையா!

சோதரநல் லுணர்ச்சியொடு தூதுவந்த நல்லவரே!
ஈதெனக்குச் சொல்லிடுவீர்! இவ்வுலகில் தமைப்பயந்த
நாட்டுக்காய்த் தம்முயிரை நமன்கையில் சேர்த்துரிமை
வேட்டவ ராம்கடமை வீரருக்குச் சாவேது?

## 6

இருபத்தும் ஓரைந்தும் இணேந்திருக்கும்
கோடியெனப்
பெருமக்கள் தொகைபடைத்த திருநாடே! நீபயந்த
மக்களிடைச் சோம்பலில்லே; மனக்கவலே ஏதுமில்லே;
தக்ககல்வி ஞானமில்லாத் தற்குறிகள் யாருமில்லே!
ஆண்டகையும் பெண்மகளும் அனேவருமே சமவுரிமை
பூண்டொழுகி வாழ்ந்திடுவார்! பொதுநலத்தில்
கருத்தொன்றி
நின்றிடுவார்! நீணிலத்தில் நீயெடுத்த சாதனேயில்
வென்றி கண்டாய்! நின்விஜயம் விம்முற்று வாழியரோ!

# 55. சோவியத் விஞ்ஞானிகளுக்கு

சௌத்ரி

எத்தனையோ தாரகையை விண்ணகத்தில் ஏற்றிவிட்டீர்!
இவ்வுலகம் அவற்றையெலாம் ஏறிட்டுப் பார்த்தபடி
நித்தம் வியக்குதையா! நீணிலத்து மானிடர்கள்
நெஞ்சுரத்தில், விண்ணியலில் நிமிர்ந்தவுங்கள்
பொன்னாட்டின்
வித்தைமிகு வாஸ்டாக்கின் விண்ணுயர்ந்த
சாதனைபோல்
வேறொன்றைக் கண்டிங்கு வியப்படைந்த தில்லை, ஐயா!
தங்கத்தால் எடைபோடும் தனிச்சிறப்பை உம்முடைய
தகைமைமிகு திருக்கரங்கள் தாரணியில் பெற்றதையா!
எங்களது பூமித்தாய் எவ்விடத்தும் தரிசுநிலம்
இல்லாத பான்மையென, எங்கெங்கும் எழில்பரவும்
மரகதத்தின் பசுமையொடு தோற்றியதோர் வண்ணமதை
வானகத்தின் மீதிருந்து கண்டறிந்த வளமையெலாம்
உரைசெய்தீர்! அதைக்கேட்டு உள்ளம் மகிழுதையா!
உரம்மிகுந்த இளங்கமுகை ஒத்தபல வீரர்களைத்
தந்ததுங்கள் பொன்னாடு! தரணியெலாம் அன்னவரைத்
தாய்க்குலத்தின் பரிவோடு தழுவும்! மனங்குளிரும்!
இந்தக் கணம்முதலாய் இறைவனுக்குப் பதிலாக,
ஏறிநிற்கும் விண்ணரங்கில் எத்தனையோ தாரகையைச்
சொந்தக் கரத்தாலே தோற்றுவித்துச் சுடரேற்றும்
சூட்சுமத்தை மானிடனும் தோன்றலிங்கு கற்றறிந்தான்!



# 56. மாவீரர் தம் நிலமே !

பிரேம் தவன்

நெடுங்கால லட்சியமாம் நிலவும் அருகில்வர
நீள்வானத் தாரகையும் நெருங்கிவரக் கையெட்டித்
தொடுங்காலம் வந்ததுகாண்! இணையில்லாத்
துணிவாற்றல்
தோய்ந்திருக்கும் மானிடரால் தொலைவெல்லாம்
அணித்துவரப்
படுங்காலம் நாம்கண்டோம்! பாரகத்தே எல்லோரும்
பரவசத்தால், பெருமிதத்தால், விம்மிதத்தால்
பருக்கின்றோம்!
நேற்றைக் கனவதற்குள் நேர்காணும் நனவாச்சு!
நினைக்கவொணு அதிசயம்தான்! நிகரில்லாப்
பெருவெற்றிப்
பேற்றிதனை, இந்நாளின் பெற்றியினை நாமதற்குள்
பெற்றிடுவோம் எனநினைக்கப் பெற்றவர்தாம்
உண்டுகொலோ?
இற்றைக்கோ வானத்தின் எழில்நிலவும் தாரகையும்
எந்தமர்தம் காலடிக்கே இறங்கிவரக் கண்டிட்டோம்!
வெற்றியிதைக் கண்காணும் விம்மிதத்தால் நம்வாழ்வே
விந்தையிலும் விந்தையதாய் விளங்கிப்
பொலிந்ததுகாண்!
புகழ்லெனினைப் பெற்றெடுத்த பொன்னுடே! உலகுக்கே
புதுமார்க்கம் காட்டிவிட்ட நின்னையும்நின் புதல்வரையும்
மகிழ்வோடு ஆயிரமாம் வகைகளிலே பாராட்டி
வாழ்த்துகிறேன்! மாண்புயர்ந்த வளநாடே! மார்க்கமதை
வகுத்துலகில் முதன்முதலில் வழிகாட்டும் நின்புதல்வர்
வாழியரோ! பல்லாண்டு பல்லாண்டு வாழியரோ!
மாவீரர் தம்நிலமே! நின்னிலத்து மாநகர்கள்
வளமார்ந்து செழிக்கட்டும்! வளர்ந்துவரும் அரும்பெல்லாம்
பூவிரிந்து மணம்பரப்பிப் பொலியட்டும்! படுநாசப்
போர்மேகம் கார்மேகம் நின்னுட்டுப் பூமியின்மேல்

மேவாமல் தாவாமல் சாந்தியெனும் மேல்காற்றின்
வீச்சினிலே திசைபரந்து விரட்டுண்டு கலையட்டும்!
ஆனந்தத் தீம்பாட்டும் இன்னிசையும் ஆர்க்கட்டும்!
அகிலத்தின் மானிடர்கள் அனைவருக்கும் வெற்றிவிழா
ஆனதொரு நாளின்றே அகண்டநெடும் வானத்தின்
ஆசாரத் திருவாசல் அகலத் திறந்ததுகாண்!
சேனுச முத்திரம்போல் செல்லும் சரித்திரத்தின்
சீரடியின் ஓசையிலே திசைகள்எதி ரொலித்ததுகாண்!
வீரன் ககாரினைப்போல், விசுவாச நட்பாளன்
வெற்றித் திருவாளன் தித்தோவும் வென்றதுபோல்,
தீரன் போப்போவிச், நிக்கோலேவ் இருபேரும்
தேசத்தின் பெருமிதமாய்ப் புகழ்வீசித் திகழ்கின்றார்!
மரணத்தை ஆபத்தைத் திரணமென மதித்திட்ட
மாவீர இரட்டையரே! மாநிலத்தின் மகத்தான
தருணமிதில் உங்களுக்கே தாரணிவாழ் மாந்தரெலாம்
தம்மினிய அன்பினையும் பாராட்டும் தருகின்றார்!



# 57. ஜெயபேரி கொட்டிடுவோம்!

ரகுநாதன்

சந்திரனே! சுக்கிரனே! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!
எந்தப் பெருந்தொலைவும் எமக்கினியோர் தூரமில்லை!
உந்திப் பறந்துவந்து உன்மடியில் யாம்தவழும்
அந்தத் திருநாளும் அணித்தாகக் கண்டுவிட்டோம்!

கந்தருவச் சுந்தரர்கள் ககனத்தே திரிந்துலவும்
விந்தைக் கதைகளெலாம் விஞ்ஞான வெற்றியினால்
சந்ததமும் யாம்காணும் சாதனையாய், சாட்சியமாய்
எந்தம் கண்முன்னால் இயங்குவதும் கண்டுவிட்டோம்!

காற்றுலகம் தனைத்தாண்டி, ககனத்து வெளிதாண்டி,
வேற்றுலகம் அத்தனைக்கும் விஜயங்கள் பலபுரிந்து,
நாற்றிசையும் புகழ்மணக்க நாம்திரும்பும் பொற்காலம்
தோற்றுவதைக் காண்பதற்குத் துவஜங்கள் கட்டி
விட்டோம்!

வான்முகட்டின் அயனகதி வட்டத்தே வழிவகுத்துத்
தான்வகுத்த தடத்தினிலே தப்பாது சென்றுவரும்
பான்மையிலே ஏவுகணை படைத்துவிட்ட சோவியத்தின்
மேன்மையினைக் கண்ணார மேதினியில் கண்டுவிட்டோம்!

அன்றொருநாள் வானத்தின் அயனவெளி வீதியிலே
சென்றோர் வளையமிட்டுத் திரும்பிவந்த செய்தியினை
மென்றே விழுங்குமுனம் விந்தையிலும் விந்தையதாய்
இன்றோர் அதிசயத்தை எம்வாழ்வில் கண்டுவிட்டோம்!

உலகத்தை விட்டகன்றே ஒருநாள் பொழுதனைத்தும்
விலகியிருந் தயனத்து வீதியிலே விசைபிறக்க
வலந்திரிந்து மீண்டுவந்த வல்லாளன் சோவியத்தின்
திலகமவன் தித்தோவின் திருப்பணியைக் கண்டு
விட்டோம்!

ஆங்குசென்றும் தித்தோவே! அயனத்துப் பயணமதில்
தூங்கிடவும் நீசெய்தாய் என்னுமொரு சொல்கேட்டும்
ஓங்கிநின்ற நின்துணிவை உன்புகழை யாமறிந்தும்
வீங்கியுளம் புடைத்தே விம்மிதங்கள் ஆகுதையா!

ஈர்த்திழுக்கும் பூப்பரப்பின் எல்லேதனை யோர்கணத்தில்
பேர்த்தெறிந்தாய்! பதினேழுப் பிரதட் சணம்செய்தே
பார்த்திட்டாய்! பெற்றெடுத்த பாருலகம் மீண்டுவந்தாய்!
கீர்த்தியிதைக் கேட்டுதலை கிறுகிறுத்துப் போகுதையா!

வானவெளி வீதியிலே வலந்திரியும் வேளையிலும்
மாநிலத்து மக்களுக்கு வாழ்த்துரைத்த நின்வாக்கு
தேனடையாய், தெள்ளமுதாய், திருவாய் மொழிதானய்,
கானமழை போலாய்எம் காதில் இனிக்குதையா!

காவியத்துப் பொன்னுலகைக் கண்காணும் நனவாக்கி
மாவியப்பில் எந்நாளும் வையகத்தை ஆழ்த்திவரும்
சோவியத்தின் தவமகனே! சோதரனே! நினையிந்நாள்
சேவிப்போம்! உன்றனுக்கு ஜெயபேரி கொட்டிடுவோம்!



## 58 அக்டோபர் புரட்சிக்கு வாழ்த்து

ரகுநாதன்

"உழைக்கின்ற மக்களுக்கே உலகம்" என்றே
உலகவியல் கண்டுசொலி, உலகைத் தன்பால்
அழைக்கின்ற மார்க்ஸிய மார்க்கம் சென்றே
ஆறிலொரு பூவுலகில் புதிய வாழ்வைத்
தழைக்கின்ற படிச்செய்து, ருஷிய மக்கள்
தளையறுத்து, வெங்கொடுமை நரக வாழ்வை
இழைக்கின்ற கொடுங்கோலர் சூழ்ச்சி வென்று
ஏற்றமுற்ற அக்டோபர் புரட்சி வாழி!

இரந்துண்ணும் வாழ்வில்லை; மக்கள் தம்மை
ஏமாற்றிச் சுரண்டுவதால் செல்வம் சேர்த்துக்
கரந்துண்ணும் புல்லுருவிக் கூட்டமில்லை;
களவில்லை; அளவில்லாச் செல்வம் எல்லாம்
நிரந்துண்ணும் புதுவாழ்வு; பொதுமை வாழ்வு;
நீடுலக மக்களெலாம் தம்மைத் தாமே
புரந்துண்ணும் பெருவாழ்வு—என்னும் ஞான
போதனையைச் சாதித்த புரட்சி வாழி!

காவியத்தில் கற்பனையில் கதையில் மற்றும்
கட்டுரையில் கண்டறியாப் புதுமை யெல்லாம்
சோவியத்தில் ஒருபுதுமை இல்லை, பொய்மைச்
சொப்பனமும் இல்லையெனப் பல்லோர் மெச்சும்
பாவனையில் சொர்க்கபுரி தன்னை, இந்தப்
பாரகத்தே உருவாக்கி, மக்கள் தம்மைத்
தேவர்குலம் எனஅமரர் சிறப்புற் றோங்கச்
செய்தநவ யுகப்புரட்சி வாழி வாழி!

துன்மதியர் போர்வெறியர் லாபக் கொள்ளைச்
சூதாட்டக் காரர்செயும் துன்பை எல்லாம்
கன்மவினை, சென்மவினை என்றே எண்ணிக்
கண்ணிழந்து, கருத்திழந்து கிடந்த மாந்தர்

தன்மதிப்பை, தம் குலத்தை, தம்ப லத்தைத்
தானுணரச் செய்தவர்க்கே தலைமை தாங்கி
நன்மதிப்பின் புத்துலகைச் சமைத்துக் காட்டி
நானிலத்தும் புகழ்படைத்த புரட்சி வாழி!

கொலைவாழ்வை நச்சுகின்ற யுத்தப் பித்தம்
கொண்டவர்கள் உலகமக்கள் தம்மைப் பிச்சைப்
புலைவாழ்வுக் குட்படுத்தும் புன்மை தன்னைப்
போக்குதற்கோர் ஆக்கநெறி புகன்று, மக்கள்
கலை வாழ்வும், களிவாழ்வும், காதல் வாழ்வும்,
கனவாழ்வும் மிகப்பெற்றுச் சிறந்தெந் நாளும்
நிலைவாழ்வு வாழுமுறை வகுத்துக் காட்டி
நிலைபெற்றுக் கலிமுடித்த புரட்சி வாழி!

இமயத்தின் எல்லைநமைப் பிரித்திட் டாலும்
இதயத்தால் பிரியாதோம் என்றுங் குற்ற
தமையனைப்போல், தாதையைப்போல், பசியை ஆற்றும்
தாயைப்போல் எம்மிடத்தே பழகி, தக்க
சமயத்தில் பல்லுதவி நல்கி, இன்றைச்
சகவாழ்வுக் கொள்கைக்கோர் சான்று யாகி
அமைகின்ற நல்லுறவு சிறக்க அன்றே
அடியெடுத்துக் கொடுத்திட்ட புரட்சி வாழி!

பிற்பட்ட நாடுகளின் சுதந்திரத்தைப்
பேணி நிற்கும் கவசமெனப் பெற்றாய்! வாழ்வில்
முற்பட்டுச் சிறக்கவெணும் நாடு கட்கோ
முந்தி வந்து உதவி செயும் வள்ளல் ஆனாய்!
அற்பத்துப் புத்தியினுல் அழிவார் தம்மை
அறிவுறுத்தும் சற்குருவும் ஆனாய்! எங்கள்
கற்பகமே! வழித்துணையே! உலகோர் நாடும்
கலங்கரையின் ஒளிவிளக்கே! வாழி! வாழி!

# NAME INDEX OF SOVIET POETS


| | | Poem No. |
|---|---|---|
| 1. | Abashidze, Irakly | 45, 46 |
| 2. | Aseyev, Nikolai | 9, 10, 11 |
| 3. | Barto H. | 43 |
| 4. | Berggolz Olga | 38 |
| 5. | Brovka, Petrus | 17, 31 |
| 6. | Dmitriyev, Oleg | 23 |
| 7. | Filatov, Alexander | 53 |
| 8. | Goncharov, Victor | 44 |
| 9. | Kaladze, Karlo | 29 |
| 10. | Kazakova, Rimma | 8 |
| 11. | Kerbabayev, Berdy | 14 |
| 12. | Kolychev, Olip | 36, 37 |
| 13. | Kuliev, Kaisyn | 18 |
| 14. | Kulikov, Boris | 30 |
| 15. | Lifshitz, Vladmir | 41 |
| 16. | Lvov, Mikhail | 39 |
| 17. | Marshak, Samuel | 42 |
| 18. | Matusovski M. | 15 |
| 19. | Mayakovsky, Vladmir | 4, 5 |
| 20. | Nemtuskin, Alitet | 27 |
| 21. | Pagirev, Gleb | 16 |
| 22. | Pavlinov, Vladmir | 2 |
| 23. | Rakhimzade, Boki | 6 |
| 24. | Raza, Rasul | 26 |
| 25. | Ryskulov, Ramis | 34 |
| 26. | Schipachov, S. | 1 |
| 27. | Seitliyev, Kara | 48, 49, 50, 51, 52 |
| 28. | Selvinsky I. | 19 |
| 29. | Smelyakov, Yarasov | 22 |
| 30. | Sofronov, Anatoli | 47 |
| 31. | Suleimenov, Olzhas | 24 |
| 32. | Surkov, Alexei | 3 |
| 33. | Turzun-Zade, Mirzo | 6, 20, 21 |
| 34. | Tvardovsky, Alexander | 12, 13 |
| 35. | Tyutchev, F. | 32, 33 |
| 36. | Vladimov, Mikhail | 40 |
| 37. | Voznesensky, Andrei | 25 |
| 38. | Yevtushenko, Yevgeny | 7, 28, 35 |